

"என் கண்மணியின்
மிருதுவான
சருமத்திற்கு
நான் ஜான்ஸன்ஸ்
பேபி சோப் ஒன்றையே
நம்புகிறேன்."




**வேறு எந்த சோப்பிலும்
ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் கிடையாது**

குழந்தைப் பராமரிப்பில் நம்பிக்கை நம்பிக்கையான நிறுவனம்.

ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன்

# கட்சித் தாவல் கலை!

தாவல் செய்யும் எம். எல். ஏ., எம். பி., அல்லது மந்திரி, தான் தாவும்படி நேர்ந்தது ஏன் என்று அறிக்கை விடுவதைப் பார்க்கிறோம்.

பார்க்கிறோமே தவிர, அதை ஆழமாகவோ, நுணுக்கமாகவோ கவனிப்பதில்லை. 'இதுவே வழக்கமாய்ப் போய் விட்டது' என்று அலட்சியமாக, இளக்காரமாக, மேலோட்டமாகப் படிக்கிறோம்.

அது தவறு. தாவல் செய்த பிரமுகரின் நிலையில் நீங்கள் இருந்து பார்த்தால்தான் உங்களுக்குத் தெரியும் — அந்த அறிக்கையைத் தயார் செய்ய அவர் எவ்வளவு சிரமப் பட்டிருக்க வேண்டும் என்று!

லட்சியத் தலைவராகப் போன வாரம் வரை இருந்தவரை, 'தலைமை தாங்க அருகதையற்றவர், குழப்பவாதி, சுயநலக்காரர், தான்தோன்றி, சர்வாதிகாரி, அறிவுச் சூன்யம், சந்தர்ப்பவாதி, இனத் துரோகி, சுருட்டல் மன்னன்' இப்படியெல்லாம் கண்டபடி பொறுப்பில்லாமல் அடைமொழி கொடுத்துத் தூற்றி விட முடியாது.

கட்சியில் இருந்த போது தலைவரை என்னென்ன வார்த்தைகள் புகழ்ந்து சொன்னோம் என்பது ஞாபகத்தில் இருக்க வேண்டும். அப்போதுதான் 'அதற்கு எதிரான குணம் அவரிடம் இருப்பதாகத் தெரிந்து வெளியேறுகிறேன்' என்று கூறுவதற்குச் சௌகரியமாக இருக்கும்.

உதாரணமாக: கட்சியில் இருந்த போது தலைவரை, 'தன்னலமற்றவர்' என்று புகழ்ந் திருந்தால் இப்போது 'சுயநலக்காரர்' என்று சொல்லலாம். முன்பு 'தியாகி' என்று ஐஸ் வைத்திருந்தால் இப்போது 'தியாகி'க்கு எதிர்ப்பதம் கண்டுபிடித்துத் திட்ட வேண்டும்.

தியாகிக்கு எதிர் வார்த்தை என்ன? சுயநலக்காரர். ஆனால் 'சுயநலக்காரர்' என்ற வார்த்தையை ஏற்கெனவே உபயோகித்தாயிற்று. ஆகவே தியாகிக்கு எதிர்ப்பதம் வேறு வார்த்தை என்ன? யோசிக்க வேண்டும். 'பேராசைக்காரர்' என்று ஒரு வார்த்தை ஞாபகத்துக்கு வர வேண்டும்.

முன்பு: ராஜதந்திரி. இப்போது: அரசியல் ஞான சூன்யம்.

அன்று 'தொண்டர் மீது பாசம் பொழிபவர்' என்று கூறியிருந்தால், இன்று 'தொண்டர்களைக் கொத்தடிமையாக நடத்துகிறவர்' என்று குறிப்பிட வேண்டும்.

(இது மாதிரியெல்லாம் திட்டுவதற்குச் சுலபமாக, யாராவது 'அரசியல் எதிர்ப்பத அகராதி' என்று ஒன்று வெளியிட்டிருந்தால் வேலை எவ்வளவு சுலுவு!)

போகட்டும். தாவல் செய்கிறவர் தமது புதிய தலைவரைப் பற்றி சில புகழுரைகள் இப்போது சொல்ல வேண்டும். 'தாய்க் கட்சிக்குத் திரும்பி விட்டேன்' என்று சுருக்கமாகச் சொன்னால் போதாது. 'உன்னை யாருப்பா இங்கே கூப்பிட்டது?' என்று தலைவர் திருப்பிக் கேட்டு விட்டால் வம்பு!

ஆகவே, தான் மீண்டும் பழைய கட்சிக்கே திரும்பியதை மீசையில் மண் ஒட்டாத பாணியில் கூற வேண்டும்.

'உங்களை விட்டு நீங்கியது மகாத் தவறு. என் புத்தியைச் சோட்டால் அடித்துக் கொள்ளணும்' என்று வெளிப்படையாக நம் போன்ற சாமான்யர்கள் வேண்டுமானால் குறிப்பிடலாம். அரசியல் பிரமுகர்கள் தங்கள் கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல் பேச வேண்டும்.

எனவே, "உங்கள் கொள்கையால் அன்றும் கவரப்பட்டேன். இன்றும் கவரப் பட்டேன். இடையில் சிலர் என்னைத் தங்கள் கொள்கையிலிருந்து கவரப் பார்த்தார்கள். ஆனால் நான் அவர்களைப் புறமுதுகிட்டு ஓடும்படி விரட்டி விட்டுக்

பா.ரா.






தங்களுக்குப் புகழ் சேர்க்க மீண்டும் தளபதி யாகத் தங்கள் அணிக்கே திரும்பி வந்து விட்டேன்'' என்பது மாதிரி சமத்காரமாகச் சொல்லத் தெரிய வேண்டும்.

இதைவிட ஒரு படி அதிகமாகப் போய், தான் மறுபடி அவர் கட்சியில் சேருவதால் தலைவருக்கு ஆதாயம் உண்டு என்பதையும் நாசூக்காகத் தெரிவிக்க வேண்டும். எப்படி? ரிஜிஸ்தர் ஆபீஸ் வாசலில் சாட்சிக் கையெழுத்துப் போடச் சில ஆட்கள் தயாராக இருப்பார்கள். அதைப் போலத் தாவும் பிரமுகருடன் உடன் செல்லச் சில தொண்டர்கள் எப்போதும் தயாராக இருப்பார்கள். பலான ஆட்களில் ஒரு பத்துப் பேரைத் தன்னோடு அழைத்துக் கொண்டு கும்ப லாகத் தலைவரிடம் செல்ல வேண்டும்.

'இவர்களெல்லாரும் கூட என்னோடு தங்கள் லட்சியப் பயணத்தில் பங்கு கொள்ள வந்திருக்கிறார்கள்' என்று கூற வேண்டும். தலைவரின் உச்சி சிறிது குளிரலாம். 'இந்த ஆளுக்குப் பின்னால் பத்துப் பேர் இருக்காங்க. ஒரு சந்தர்ப்பத் தில் உபயோகப்படுவார்' என்று தலைவர் ஏதோ ஒரு கணக்குப் போட்டு இவரை அணைத்துக் கொண்டு பழசையெல்லாம் மறந்து விட்டது போல ஏதாவது ஒரு இலக்கிய வாக்கியம் சொல்லுவார்.

உதாரணமாக: 'அகர முதல எழுத்தெல் லாம் போல' என்று ஏதோ சொன்னார் என்று வையுங்கள். கட்சி மாறிய பிரமுகர் உடனே சமயோசிதமாக அந்த வாக்கியத் துக்கும், தான் திரும்ப வந்து சேர்ந்ததற்கும், என்ன சம்பந்தம் என்று வேகமாக யோசித் துப் பொருத்தமாக அதை ஒட்டிப் பேச வேண்டும்.

'''அகர முதல எழுத்தெல்லாம் போல' என்று தலைவர் அற்புதமாகச் சொன்னார். 'அ' என்பது உயிர் எழுத்து. தலைவர் என் உயிரனையர். உயிரைப் பிரிந்து உடல் எங்காவது இருந்ததுண்டா? 'அ' என்பது டன் 'கர' என்பது சேர்ந்தால் அகர என்ற அற்புதச் சொல் உருவாகிறது. நான் இதுவரை உபயோகமற்ற, உயிரற்ற ஒரு கட்சிக்குக் 'கர'மாக இருந்தேன். இப்போது தலைவருடன் இணைந்து உயிரோட்டம் பெற்று அகரமாகி விட்டேன்!''

இதைச் சொன்னதும் உடன் சென்ற பத்துப் பேரும் கை தட்டி இலக்கிய நயத்தைச் சிறப்பித்துப் பாராட்ட வேண்டும். தலைவரும் வேறு வழியில் லாமல் அங்கீகரிப்பார்.

இன்னொரு முக்கிய விஷயம். தலைவர் ஏதாவது பொது நிகழ்ச்சியில் பங்கு கொள்ளும் போதுதான் தாவலர் போய் இணைய வேண்டும். தலைவர், கட்சிக் காரியாலயத்தில் இருக்கும் போது போனால் கன்னாபின்னாவென்று திட்டி னாலும் திட்டலாம். அல்லது உள்ளே நுழைய விடாமல் துரத்தினாலும் துரத்த லாம்! அதனால் தலைவர் திருமணம் போன்ற பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் போது தலைவர் அசந்து போகிற மாதிரி ஒரு பெரிய பொன்னா டையையோ வெள்ளியாடையையோ தலை வருக்குப் போர்த்தி, புகைப்படமும் எடுத்துக் கொண்டு விட்டால் அநேகமாகத் தாவலின் முதல் கட்டம் இனிது முடிந்தது என்று அர்த்தம்.

''என்னய்யா, நீ பாட்டுக்கு வந்து நாள்னு ஒரு பொன்னாடையைப் போர்த் திட்டு, 'உங்க கட்சிக்குத் திரும்ப வந்துட் டேன்னு' சொல்றே. உன்னை ஏற்றுக்க முடியாது. இந்தா உன் பொன்னாடை. எடுத்திட்டுப் போ'' என்று எந்த அரசியல் தலைவரும் தாவலர்களை நிராகரிப்ப தில்லை. அதுதான் அரசியல் பண்பாடு.

இதற்கப்புறம் இரண்டாம் கட்ட வேலை துவங்குகிறது. அடுத்த ஒரு முப்பது நாளைக் குத் தினமும் ஒரு அறிக்கையைப் பிரமுகர் தயாரிக்க வேண்டும்.

தான் இதற்கு முன் இருந்த கட்சியின் தலைவர் அந்தரங்கமாக என்னென்ன பழக்கம் உள்ளவர், எந்த எந்த விதமாக முட்டாள்தனமாக நடந்து கொண்டார், எப்படிப்பட்ட மூர்க்கர், சித்தரமானவர் என்பதையெல்லாம் அறிக்கை என்ற பெயரால் சிறு சிறு சுவையான நிகழ்ச்சி களாகச் செய்திப் பத்திரிகைகளுக்கு வழங்க வேண்டும். இதற்கு ஏகமாகக் கற்பனா சக்தி யும் பொறுமையும் தேவை.

இப்போது சொல்லுங்கள்: கட்சித் தாவல் என்பது சுலபமான காரியமா?



# பளபளப்பு இல்லாத படவிழா!

ஒவ்வோர் ஆண்டும் இது ஒரு சடங்காகி விட்டதைப் போலத் தோன்றுகிறது. சர்வதேசப் படவிழாவையொட்டி, 'இந்தியன் பனோரமா' பகுதிக்கு நமது நாட்டின் படங்கள் தேர்வு செய்யப்பட்டுப் பட்டியல் வெளியானதும், ஏதாவது ஒரு மாநிலத்தைச் சேர்ந்த படத் தயாரிப்பாளர்கள் தாங்கள் ஒதுக்கப்பட்டு விட்டதாகக் குமுறிப் பொங்குகிறார்கள்.

கடந்த ஆண்டில் இப்படிப் பொங்கியெழுந்தவர்கள் தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள். இம்முறை போர்க்கொடி உயர்த்தியுள்ளவர்கள் கர்நாடகாக்காரர்கள். இந்த அணிக்குத் தலைமை தாங்கிப் பெருங்குரல் எழுப்பியவர் நடிகர் — டைரக்டர் சுரேஷ் ஹெப்லிகார். 'மலையாள, வங்காள, இந்தித் தயாரிப்பாளர்களின் ஆதிக்கம்மிருந்துவிட்டதாகக் குறை கூறினார்.

படவிழாவைப் பொறுத்தவரையில் வழக்கமான பரபரப்புக் காணப்படவில்லை. ஏனோ தெரியவில்லை. உள்ளுக்குள் எங்கேயோ ஓர் உள்ளார்ந்த அசுவாரஸ்யம் படர்ந்திருப்பதைப் போன்ற உணர்வே ஏற்படுகிறது.

விழாத் தொடக்கமும் கூட ஒரு சம்பிரதாய நிகழ்ச்சியாக இடம் பெற்றதைப் போலவே தோன்றியது (செய்திப் பத்திரிகைகள் 'glittering' என்கிற சொல்லைப் பயன்படுத்தியிருந்தாலும்.)

தமிழக முதல்வரின் ஆங்கில உரையில் அவருக்கே உரிய பாணியில் சொற்பிரயோகங்கள் இடம் பெற்றுப் பார்வையாளர்கள்



• துருக்கி படம்: போரின் பாதிப்பு.

மத்தியில் கலகலப்பை ஏற்படுத்தின. (''பதின் மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு படவிழா சென்னைக்கு வந்திருக்கிறது — என்னைப் போல,'' — ''சென்னை ஓர் அமைதியான நகரம்'').

தாம் எதையும் திருந்தச் செய்கிறவர் என்பதை உணர்த்தும் வகையில் குத்துவிளக்கேற்றும் போது கவனமாகத் திரிகளை எண்ணெயில் நனைத்து இழுத்து அதன் பின்னரே ஏற்றினார்.

'கச்சா பிலிம்களின் விலை உடனடியாகக் குறைக்கப்படாவிட்டால் திரைப்படத்துறை ஒத்துழைப்புத் தருவதைப் பற்றி மறுபரிசீலனை செய்யும் என்று முதல் நாள் அறிக்கை விட்டிருந்த இந்திப் படத் தயாரிப்பாளர் ஜி. பி. சிப்பி விழா மேடையில் மிகவும் உணர்ச்சி வசப்பட்டுப் போய், மத ஒற்றுமை சிதைந்து போனால் அது நாட்டுக்குப் பெரும் பிரச்னையாகிவிடும் என்று உரத்த குரலில் பேசித் தடம் மாறிப் போனார்.

விழா நிகழ்ச்சிகளைத் தொகுத்தளித்த சுஹாசினியின் பேச்சு மணிப்பிரவாளமாக இருந்தது. சுவாரஸ்யமான ஆங்கில உச்சரிப்பு. அதன் பாதிப்பு, தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்திய போதும் இடம் பெற்றிருந்தது. ஆங்கிலப் பேச்சினிடையே பெயரைக் குறிப்பிடும்போதெல்லாம் 'அவர்கள்' என்ற தமிழ்ச் சொல்லையும் பயன்படுத்தியது தான் என்னவோ போலிருந்தது.

**ப**டவிழாத் தொடக்கத்துக்கு இரண்டு நாட்களுக்கு முன்னரே பத்திரிகையாளர் — பிரதிநிதிகள் ஆகியோருக்கான பிரத்தியேகக் காட்சிகள் தொடங்கிவிட்டன.

உலகப் போர் முடிந்து நாற்பத்தைந்து ஆண்டுகள் முடிந்த பின்னரும் அதன் கடுமையான பாதிப்புகள் பெரும்பாலான வெளிநாட்டுப் பட இயக்குனர்களின் மனங்களில் இன்னும் ஆழமாக இடம் பெற்றுள்ளன. முதல் மூன்று படங்கள் போரையும், அதன் விளைவுகளையும் பின்னணியாகக் கொண்டிருந்தன.

'பிளாக் அவுட் நைட்ஸ்' (துருக்கி) போரின் காரணமாகச் சமூக வாழ்வில் ஏற்படும் குழப்பங்களை விவரிக்கிறது. மக்களின் அவலங்களையும், நாட்டுச் சுதந்திரத்தின் அவசியத்தையும் வலியுறுத்தும் கவிதைகளைப் படைத்துப் புத்தகமாக வெளியிட்ட ஆசிரியர் ஒருவர் 'கம்யூனிஸ்ட்' என்று குற்றம் சாட்டப்பட்டு ஆதிக்க அரசின் கண்டனத்துக்குள்ளாகிறார். புத்தகம் தடை செய்யப்பட்டு அவரைக் கைது செய்ய உத்தரவிடப்படுகிறது. அதைத் தெரிந்து கொண்ட அவர் ஓடி ஒளிகிறார். முடிவில் போலீசாரிடம் மாட்டிக் கொண்டு கொடுமைகளுக்குள்ளாகிறார்.

படத்தைப் பார்த்துவிட்டுப் பின்னர் கமலஹாசன் கூறிய கருத்து: ''அந்தக் கதாநாயகன்... துருக்கியில் ஒரு 'மினி' சுப்பிரமணிய பாரதியார் போலிருக்கிறது...''

கொசுறு: படவிழாவுக்குச் சம்பந்தமில்லாத — ஆனால் படவிழாவின் போது தெரிந்து கொண்ட ஒரு செய்தி: நாடக ஆசிரியர் — திரைப்பட இயக்குனர் கோமல் சுவாமிநாதன் மிக உற்சாகமாக இருந்தார். ''இப்போது நானும் ஒரு பத்திரிகை ஆசிரியர் ஆகியிருக்கிறேன்'' என்றார்.

அவர் ஆசிரியராகப் பொறுப்பேற்றுள்ள பத்திரிகையின் பெயர்: சுபமங்களா.

— சி. ஆர். கே.

---



அவர்: வரவர, எதைத்தான் ஸ்பான்சர்ட் ப்ரோகிராமாய் நடத்தறதுன்னு இல்லாமப் போச்சு...

இவர்: ஏன்...?

அவர்: அதோ பாருங்க... மார்கழி பஜனை செய்துக்கிட்டுப் போறவங்க பின்னாலேயே ஒருத்தர், 'இந்த பஜனை ஸ்பான்சர்ட் பை'ன்னு ஒரு போர்டைப் பிடிச்சுக்கிட்டு வர்றதை...!

— ராஜி ராதா.

''இரயில் மறியல் போராட்டத்தின் போது தண்டவாளத்தில் படுக்கிறதுக்கு முன்னாடி தலைவர் உன்னைக் கூப்பிட்டு ஏதோ சொன்னாரே, என்னது?''

'' 'அடுத்த ஒரு மணி நேரத்துக்கு எதுவும் வண்டி கிடையாதுன்னு நீ சொன்னதை நம்பித்தான் படுக்கிறேன்'னு சொன்னார்!''

— வேதபுரி எஸ். இரமேஷ்.






# இப்போது தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்

உங்கள் வயிற்றில் இன்னொரு புதிய உயிர், உங்கள் குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் சிசுவின் வளர்ச்சிக்கும், உங்கள் உடல் நலத்திற்கும் மிகத் தேவை சரியான ஊட்டச் சத்துக்கள். எனவே காம்ப்ளான்-விட்டாமில்க் அருந்துங்கள். இது கர்ப்பிணிக்கும் பிறக்கப்போகும் குழந்தைக்கும் உணவில் பற்றாத கூடுதல் ஊட்டச்சத்தை அளிக்கிறது.

காம்ப்ளான்-விட்டாமில்க்கில் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களும் உள்ளன. மேலும் உங்களுக்கும் பிறக்கப் போகும் குழந்தைக்கும் தேவையான கீழ்க்காணும் கூடுதல் ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.

- கூடுதல் ஃபோலிக் ஆஸிடு
- கூடுதல் பால்புரதம் (22.2 கிராம்)
- கூடுதல் வைட்டமின் A, $B_6$ மற்றும் C
- கூடுதல் இரும்புச்சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம்.




ரெகுலர் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/90 TAM



# வில்லியாக மாறிய கதாநாயகி!

சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்று நான் என் பத்திரிகையில் கூட எழுதியிருக்கிறேன். அதற்கு இதுவரையில் மறுப்பே வரவில்லை. உண்மைகளை எப்படி மறுக்க முடியும்? அதனால்தான் தி. மு. க. அரசு டிஸ்மிஸ் செய்யப்பட வேண்டும் என்கிறோம்'' என்று சொல்கிறார் எஸ். டி. எஸ்.

கே. ஏ. கிருஷ்ணசாமி நாடாளுமன்றத்

**'பெரும்பான்மை பலத்தோடு ஆட்சியிலிருக்கும் ஓர் அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டுமென்பது எந்த விதத்தில் நியாயம்? அது வில்லத்தனம் இல்லையா? கதாநாயகியாகத் திரைப்படங்களில் நடித்தவர், அரசியலில் வில்லியாக மாற வேண்டுமா?' என்று கேட்டால், 'தி. மு. க. தலைவர்கள் வில்லன்களாக விளங்குவதால்தான் அவர்கள் சூழ்ச்சிகளை முறியடிக்கும் உபாயமாக எங்கள் தலைவியும் வில்லியாக மாற நேரிட்டிருக்கிறது' என்கிறார்கள் அ. தி. மு. க. தலைவர்கள். விவாதங்களைச் சற்று விரிவாகக் காண்போமா?**

''தி. மு. க. ஊழல் மிகுந்த கட்சி; நடப்பது மக்கள் விரோத ஆட்சி. உதாரணத்திற்கு ஒன்று சொல்கிறேன்'' என்று ஆரம்பிக்கிறார் எஸ். டி. சோமசுந்தரம். ''இன்ஸ்பெக்டர் ஆப் பாக்டரீஸ் என்னும் பதவியில் இருபத்தேழு இடம் காலியாக இருக்கிறது. அதைத் தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன்தான் தேர்ந்தெடுத்து நிரப்ப வேண்டும். ஆனால் நடந்தது என்ன? ஓர் இடத்திற்கு ஒரு லட்சம் என்கிற ரீதியில் இருபத்தேழு இடங்களுக்கும் ரேட் பேசி, இன்னின்னாரைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று பப்ளிக் சர்வீஸ் கமிஷனுக்கு லிஸ்ட் அனுப்பினார்கள். அங்கிருக்கும் சில யோக்யமான அதிகாரிகள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை என்பதால் இன்னும் அந்த இடங்கள் காலியாகத்தான் இருக்கின்றன. இப்படி எத்தனையோ ஊழல்களைப் பட்டியலிட்டுக் கொண்டே போகலாம். இதிலெல்லாம் முதலமைச்சரும் அவர் குடும்பத்தாருமே நேரடியாகச் தேர்தலைச் சுட்டிக் காட்டுகிறார். ''தி.மு.க. அரசின் பெரும்பான்மை பலம் என்பது சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையில் இருக்கலாம்; ஆனால் மக்களுடைய எண்ணத்தில் அல்ல. அதனால்தான் சில









நல்ல திட்டங்களை அறிவித்திருந்த போதிலும் கூட, கடந்த பாராளுமன்றத் தேர்தலில், தி. மு. க. வை மக்கள் முழுமையாகப் புறக்கணித்தார்கள். இந்தத் தோல்வியைத் தி. மு. க. ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. தங்களது தோல்விக்கு ஒரு சில பத்திரிகைகள்தான் காரணம் — அதுவும் அந்தப் பத்திரிகைகளை நடத்துகிற பிராமணர்கள்தான் காரணம் என்று, தி. க. வினரைத்தான் தூண்டி விட்டுப் பூணூல் அறுப்புச் செய்தது. இது எதைக் காட்டுகிறது? பத்திரிகைச் சுதந்திரத்தையே நசுக்கத் துடிக்கும் தி. மு. க. வின் போக்கைத்தான்! அதனால்தான் ஜனநாயகத்தின் பேரில் நம்பிக்கை கொண்ட எங்கள் கட்சி ஜனநாயக விரோதப் போக்கு நீடிக்கக் கூடாது என்பதற்காகத் தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்று குரல் கொடுக்கிறது...'' என்கிறார் கே. எ. கே.

''தி. மு. க. அரசு ஆட்சிப் பொறுப்புக்கு வந்த பிறகுதான் இலங்கைப் பிரச்னை மேலும் சிக்கலாகியிருக்கிறது. இலங்கைப் பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டுமென் பதில் கருணாநிதி உண்மையிலேயே அக்கறை கொண்டவராக இருந்திருந்தால், தி. மு. க. வும் பங்கு பெற்றிருந்த தேசிய முன்னணி ஆட்சியின்போதே ஒரு தீர்வு கண்டிருக்கலாமே! ஆனால் எதையுமே செய்யவில்லையே! இலங்கைப் போராளிக் குழுக்களிடையே உள்ள பல்வேறு கோஷ்டிகளையும் கருணாநிதி சமமாக நடத்தவில்லை. ஒரு குறிப்பிட்ட கோஷ்டியை மட்டுமே அவர் ஆதரித்துக் கொண்டிருப்பதால்தான், பத்மநாபா போன்றவர்களைத் தைரியமாக அவர்கள் படுகொலை செய்தார்கள். இதுபோன்ற படுபாதகச் செயல்களுக்குத் தி. மு. க. அரசின் ஆதரவு ஒருபோதும் கிடைக்காது என்பது உண்மையாக இருந்திருந்தால், இந்தப் படுகொலைகள் நடந்திருக்குமா?'' என்று கேட்கிறார்

**ஊ**ழல் குற்றச்சாட்டுகளைக் காரணம் காட்டியே ஓர் அரசைக் கலைக்க முடியுமா? ''முடியாது; அப்படிச் செய்யவும் கூடாது'' என்கிறார் பண்ருட்டி ராமச்சந்திரன். ''ஊழல் குற்றச்சாட்டுகளைச் சட்டசபைதான் கேட்க வேண்டும். அரசியல் சாசனத்தின் 356—வது பிரிவைப் பயன்படுத்தி ஓர் அரசைக் கலைத்து ஜனாதிபதி ஆட்சியை அறிவிப்பதென்றால், அந்த அரசு அரசியல் சாசனத்தின் ஷரத்துக்களின்படி செயல்பட முடியாத ஒரு நிலை இருக்க வேண்டும். இங்கு அப்படியில்லையே...'' என்கிறார் பண்ருட்டி.

''அரசு எங்கே செயல்படுகிறது?'' என்கிறார் எஸ். டி. எஸ். ''இந்த அரசு எப்போது வேண்டுமானாலும் கலைக்கப்படலாம் என்கிற வதந்திகள் இருப்பதால் அரசு அதிகாரிகள் செயல்படாமல் இருக்கிற நிலை இருப்பதாகக் கருணாநிதியே பல இடங்களில் பேசியிருக்கிறாரே...'' என்கிறார் அவர். அப்படி வதந்திகள் பரவத் தமது கட்சியும் தோழமைக் கட்சியும்தான் காரணம் என்பதை ஒதுக்கி விட்டுத் தொடர்ந்து பேசுகிறார்:





## 356 எதற்கு?

**சென்னை உயர் நீதி மன்ற ஸீனியர் வழக்கறிஞர் ஆர். ஜி. ராஜன் சொல்கிறார்:**

சுதந்திர இந்தியாவில் இதுவரை ஐம்பது தடவைகளுக்கு மேல் அரசியல் சாசனத்தின் 356 வது பிரிவு பயன்படுத்தப்பட்டு மாநில ஆட்சிகள் கலைக்கப்பட்டுள்ளன. அரசியல் நோக்கத்துக்காக இந்தப் பிரிவு பயன்படுத்தப்படுவதாகவும் இந்த ஷரத்தை நீக்கிவிட வேண்டும் என்றும் எதிர்க் கட்சிகள் கூறும். ஆனால் அதே எதிர்க் கட்சி மத்தியில் ஆட்சிக்கு வந்ததால், தானே இந்த ஷரத்தைப் பயன்படுத்தி ஆட்சியைக் கலைக்கும்!

இந்த ஷரத்து ஒரு பாதுகாப்புக்காக அரசியல் சாசனத்தில் இடம் பெற்றுள்ளது.

எஸ். டி. எஸ்.

"இலங்கைத் தமிழ்ப் போராளிக் குழுக்கள் ஒருவரையொருவர் படுகொலை செய்வதென்பது புதிய விஷயமல்லவே? எம். ஜி. ஆர். முதல்வராக இருந்த போது பிரபாகரனும் முகுந்தனும் பாண்டிபஜாரில் துப்பாக்கிச் சண்டை நடத்திக் கொள்ளவில்லையா?"

"உண்மைதான். ஆனால் உடனடியாக அவர்களை எம். ஜி. ஆர். அழைத்துப் பேசினார். உங்களுக்கு எல்லா உதவிகளையும் செய்கிறோம். ஆனால் உங்கள் சண்டைகளையெல்லாம் இலங்கையில் வைத்துக் கொள்ளுங்கள். தமிழகத்தில் வேண்டாம். எனக்கு நீங்கள் அனைவருமே ஒன்றுதான் என்று கண்டிப்பாகப் பேசினார். ஆனால் கருணாநிதி அப்படிச் செய்யவில்லை. படுகொலை செய்யப்பட்டவர்களுக்குப் போலியாக அனுதாபம் தெரிவித்ததோடு சரி...!" என்கிறார் எஸ். டி. எஸ்.

ஆனால் பண்ருட்டி இதை வேறு விதமாகப் பார்க்கிறார். "பத்மநாபா போன்றவர்கள் படுகொலை செய்யப்பட்டதற்கு, இலங்கைப் போராளிகள் விஷயத்தில் தி. மு. க. அரசின் ஒருதலைப்பட்சமான ஆதரவுதான் காரணம் என்று சொல்லி விட முடியாது. அவர்கள் உலகத்தின் எந்த மூலையில் இருந்திருந்தாலும் இவர்களால் படுகொலை செய்யப்பட்டே இருப்பார்கள்...!" என்கிறார் பண்ருட்டி.

எஸ். டி. எஸ். மேலும் ஒரு வலுவான வாதத்தை முன்வைக்கிறார்: "ஜனநாயகத்தில் எதிர்க் கட்சிகள் என்பது மிக முக்கியமான ஓர் அம்சம். ஆனால் தி. மு. க. அரசு எதிர்க்கட்சிகள் விஷயத்தில் எப்படி நடந்து கொள்கிறது? உதாரணத்திற்கு எங்கள் பொதுச் செயலாளர் ஜெயலலிதாவின் ராஜினாமா விஷயத்தையே எடுத்துக் கொள்வோம். அவர் ராஜினாமா கடிதம் எழுதி நடராஜனிடம் கொடுத்தது உண்மைதான். அது உள்கட்சி விவகாரம். எங்கள் மேல் இருந்த கோபத்தில் அவர் ராஜினாமா செய்வதாகச் சொல்லி பயமுறுத்த அப்படிச் செய்தார். ஆனால் நடராஜன் எங்களிடம் விஷயத்தைச் சொன்ன போது நாங்கள் போய் அவரைச் சமாதானப்படுத்தி ராஜினாமா செய்யக் கூடாது என்றோம். அவரும் சரியென்று ஒப்புக் கொண்டு, நடராஜனுக்கு போன் செய்து அக் கடிதத்தைக் கிழித்துப் போட்டு விடும்படி சொன்னார். கடிதத்தை ஜெயலலிதா கண் முன்பாகவே கிழித்துப் போடுவது தான் சரியாக இருக்கும் என்று நினைத்த நடராஜன் அதைப் பத்திரப்படுத்தி வைத்திருந்தார். ஆனால் இந்த விஷயங்களையெல்லாம் டெலிபோனில் ஒட்டுக் கேட்ட தி. மு. க. அரசு என்ன செய்தது? போலீஸை வைத்துக் கடிதத்தைக் கைப்பற்றி பத்திரிகைகளுக்குப் சபாநாயகருக்கும் அனுப்பியது. எதிர்க் கட்சியை ஜனநாயக விரோதமாக அழிக்க நினைக்கும் ஓர் அரசு நீடிப்பது எந்த விதத்திலும் சரியல்ல; அதனால்தான் தி. மு. க. அரசு கலைக்கப்பட வேண்டும் என்கிறோம்!" என்கிறார் எஸ். டி. எஸ்.

அ. தி. மு. க. வுடன் சேர்ந்து கொண்டு தமிழக இ. காங்கிரஸும் டிஸ்மிஸ் கோஷம் எழுப்புவானேன்? இதில் அவர்களுக்கு என்ன லாபமிருக்கிறது? அவர்கள் ஏன் டெல்லிக்குச் சென்று மனு கொடுக்கிறார்கள்?

மத்தியில் சந்திரசேகருக்குக் கொடுக்கிற ஆதரவை எப்போது வேண்டுமானாலும் இ. காங்கிரஸ் விலக்கிக் கொள்ளலாம்; நாடாளுமன்றத் தேர்தல் வரலாம். அப்படி வந்தால், ஜெயலலிதாவின் ஆதரவு ராஜீவ் காந்திக்குத் தேவை. இந்த நிலையில், வரப் போகிற நாடாளுமன்றத் தேர்தலுடனேயே தமிழக சட்டமன்றத் தேர்தலையும் நடத்த வேண்டும் என்பது ஜெயலலிதாவின் விருப்பம். எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரம் முதல்வர் நாற்காலியில் உட்கார்ந்து விட வேண்டும் என்ற ஆசை. நாடாளுமன்றம் காங்கிரஸுக்கு, மாநிலம் அ. தி. மு. க. வுக்கு என்று தொகுதிகளைப் பங்கு பிரித்துக் கொள்வார்கள். ஆனால் இதற்காகத் திடீரென்று தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்தால், அது மக்களிடையில் தி. மு. க. சார்பான அனுதாப அலையைத் தோற்றுவித்து விடும் வாய்ப்பு இருக்கிறது. அதனால்தான் ஒரு பக்கம் ஜெ. கட்சிக்காரர்கள் 'டிஸ்மிஸ் டிஸ்மிஸ்' என்று குரல் கொடுக்க, தமிழக இ. காங்கிரஸும் அதற்கு ஒத்தூதிக் கொண்டிருக்கிறது. 'தி.மு.க. அரசு டிஸ்மிஸ்' என்பது மக்கள் மனத்தில் மெல்ல மெல்லப் பதிந்து விடும்.

அதைத் துஷ்பிரயோகம் செய்யும் போது தான் பிரச்னைகள் எழுகின்றன.

ஓர் அரசு தனது மெஜாரிட்டியை நிரூபிக்க முடியாத நிலையில் மாற்று ஏற்பாடுகளுக்கு வழி செய்வது, மெஜாரிட்டி ஆட்சி இருந்தாலும், சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்க முடியாத நிலையில், அந்தக் கட்சி இருப்பது போன்ற சூழ்நிலைகள் இருந்தால் அரசியல் சட்டம் 356 பயன்படுத்தப்பட்டு, ஆட்சி கலைக்கப்படும். இந்தக் காரணங்கள் சரியான காரணங்கள் என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருப்பவை. இதுபோன்ற காரணங்கள் அல்லாது அரசியல் காழ்ப்புணர்ச்சி காரணமாக ஓர் அரசு கலைக்கப்படுமேயானால், பாதிக்கப்பட்டவர்கள், நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்க முடியும். ஆனால் அப்போதும் ஜனாதிபதியின் நடவடிக்கைக்குத் தகுந்த காரணம் காட்டுமாறு, அவரை நீதிமன்றம் வற்புறுத்த முடியாது.

பேட்டி: ப்ரியன்

தவிர்க்க முடியாதது போலும் என்ற எண்ணம் உருவாகி விடும். அப்புறம் டிஸ்மிஸ் செய்தால் மக்களிடையே அது எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்தாது என்று கருதுகிறார்கள். அதற்காகத்தான் தொடர்கதையாக நீடிக்கும் இந்த 'டிஸ்மிஸ்' கூச்சல், புகார் மனு, ஊழல் குற்றச்சாட்டுக்கள், சென்னை — தில்லி சந்திப்புக்கள், 'ரகசிய ஆவணங்கள்' முதலியன எல்லாம்!

இவையெல்லாம் தி. மு. க. தரப்பில் ஒரு நிச்சயமற்ற தன்மையை உருவாக்கி வருகின்றன என்பதில் ஐயமில்லை. கப்பற்படை தளபதி ராய் தான் விடுதலைப் புலிகள் தொடர்பாக தமிழக அரசைக் குற்றம் சாட்டிய போது ஆரம்பமான ஒரு நிலையற்ற தன்மை படிப்படியாக வளர்ந்து வர, கலைஞரோ குமணன் கதையில் தொடங்கி இப்போது 'தேர்தலுக்குத் தயாராகுங்கள்' வரை வந்து விட்டார்! சமீபத்தில் அப்பல்லோ மருத்துவமனையில் ஒரு நிகழ்ச்சிக்குச் சென்ற போது கூட 'எத்தனையோ கருவிகளைக் கண்டு பிடிக்கிறார்கள்; ஆனால் இருதயத்தில் ஓடும் எண்ணங்களை அறிய ஒரு கருவி இல்லையே! அது இருந்தால் மற்றவர்களின் எண்ணங்களை அறிந்து, அதற்குத் தகுந்தாற் போல் நடந்து கொள்ளலாமே!' என்று ரொம்பவும் விரக்தியோடு முகாரி பாடினார். 'டிஸ்மிஸ் ஆனால் என்ன? மறுபடி நாம்தானே பதவிக்கு வரப் போகிறோம்' என்ற மன உறுதி, தன்னம்பிக்கை அவருக்கு இல்லை. இ. காங்கிரஸ் ஜெ. கட்சி கூட்டணியை எதிர்த்து வெற்றி பெறுவது சாத்தியமில்லை என்ற பயம் அவருக்கு இருக்கிறது.

இந்த பயத்தின் காரணமாகத்தான், எந்தக் காளிமுத்துவை முன்பு தி. மு. க. வில் சேர்த்துக் கொள்ளத் தயாராயில்லை என்று சொல்லி, தாமும் தம்மோடு சிலரும் தி. மு. க. வுக்கு வரத் தயாராயிருப்பதாகக் காளிமுத்து எழுதிய கடிதத்தைப் பத்திரிகைகளுக்கெல்லாம் கொடுத்து அவமானப்படுத்தினாரோ, அதே காளிமுத்துவை இன்றைக்கு உடன் பிறப்பின் பாசத்தோடு சேர்த்துக் கொண்டிருக்கிறார். அது மட்டுமல்ல; முன்பு கே. ஏ. கே., ஆர். எம். வீ. போன்றவர்கள் கூட தி. மு. க. வுக்கு வந்து விடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த தருணத்தைப் பயன்படுத்திக் கொள்ளாமல் போய் விட்டோமே என்று இப்போது தி. மு. க. தலைமை வருத்தப்படுவதாகவும் கேள்வி! அந்த அளவுக்குத் தி. மு. க. தலைமையை ஜெயலலிதா ஜுரம் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது.

இவற்றோடு, 'முன்பு தலைவர் மு. க. முத்துவைத் தகுதிக்கு மீறி வளர்த்தார். அதுவே தி. மு. க. வைப் பாதாளத்தில் தள்ளுவதற்குக் காரணமாகி விட்டது. இப்போது மு. க. ஸ்டாலினை வளர்க்கிறார். இது எதில் போய் முடியுமோ...?' என்று செண்டிமெண்டலாய்ப் பயப்பட்டுக் கொண்டிருக்கிற தி. மு. க. தொண்டர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

தமிழக அரசியலின் திசையை, ஜெயலலிதாவால் மாற்றி விட முடியும் என்கிற நிலை ஏற்பட்டுப் போயிருப்பதை மறுக்க முடியாது. ஆனால், அவர் திசை மாற்றுகிற விதம் ஆரோக்கியமானதா என்பதுதான் கேள்வி. அரசியல் சாசனத்தின் உத்தரவாதம் பெற்று அதன் ஷரத்துக்களின்படி ஆட்சி நடத்தி வரும் மேற்கு வங்க அரசையும் தமிழக அரசையும் மாற்றி மாற்றி மிரட்டிக் கொண்டேயிருக்கிறார் பிரதமர் சந்திரசேகர். 'கலைக்க மாட்டேன்' என்ற அவரது உறுதிமொழியை நம்ப முடியாது என்பதையும் அவரே தமது முரண்பாடுகளால் அடிக்கடி நிரூபித்தும் வருகிறார். முதலில் அஸ்ஸாம், பிறகு பாண்டிச்சேரி, அடுத்தது தமிழ்நாடு, அப்புறம் மேற்கு வங்கம் என்று திட்டமிட்டுக் காரியங்கள் நடப்பதாகத்தான் தோன்றுகிறது. பிரதமரின் இந்தப் போக்கு, தமக்கு ஆதரவு அளித்து வரும் இ. காங்கிரஸையும் அதன் தோழமைக் கட்சியான அ. தி. மு. க.வையும் திருப்திப்படுத்தத்தான் என்று கருதவும் இடமிருக்கிறது. அரசியல் சாசனத்தின் 356வது பிரிவைப் பிரயோகித்து ஆட்சிக் கலைப்பு செய்ய வேண்டிய சூழ்நிலை, தமிழகத்தில் நிலவுகிறதா என்றால் அரசியல் சட்ட நிபுணர்கள் இல்லவே இல்லை என்றுதான் கூறுவார்கள். ஆனால் அத்தகைய அநீதி மீண்டும் ஒருமுறை நிகழப் போகிறதாகத்தான் தோன்றுகிறது.

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படம்: சுபா


356 குற்றச்சாட்டுகளை
356 தடவை
சொன்னதோட
356 பக்கத்திலே
எழுதி 356
கையெழுத்து
வாங்கி...
வாழப்பாடியார்
356 ஊழல்...
356 லஞ்சம்...
356 அதிகார
சந்திரசேகர்
ஜெயலலிதா
நானுந்தான்
ஆட்சியைக்
கலைக்க
மாட்டேன்னு
356 தடவை
சொல்லிட்டேன்
கவலைப்
படாதீங்க...!
இன்னும்
எத்தனை
குட்டு வாங்கப்
போறியோ...?
சந்திரசேகர்
இ.காங்.
ஜெயலலிதா
தமிழகத்தில்
அ.தி.மு.க.
ஆட்சி.
என்னடா, பழத்தைத்
தின்னுட்டு தோலைத்
தர்றாங்களேன்னு
பார்க்காதீங்க...
அதிலேயும்
சத்து
இருக்கு...!
செய்தி - தேர்தல் தொகுதி
உடன்பாடு குறித்து
ஜெயலலிதா அறிக்கை.



**கல்கி**

1991 ஜனவரி 20
மலர் : 49 இதழ் : 25
பிரமோதூத தை 7



# தபால்துறை ஊழியர் வேலை நிறுத்தம்

தொலைபேசி இலாகா ஊழியர்களின் வேலை நிறுத்தத்தால் ஏற்பட்ட துன்பங்களின் ரணம் ஆறுவதற்குள் தபால்துறை ஊழியர்களின் வேலை நிறுத்தம், புதிய, ஆழமான ரணங்களை உருவாக்கியுள்ளது. ஐந்தாறு நாட்கள் தபால் பட்டுவாடா இல்லாததால் எளியோருக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய பலவகையான துன்பங்கள் எழுத்தில் அடங்காதவை; எண்ணி மாளாதவை. தவிர, தனி நபர்களுக்கும், நிறுவனங்களுக்கும் வந்துசேர வேண்டிய காசோலைகள், மெய்ல் டிரான்ஸ்ஃபர்கள் போன்றவை தாமதப்பட்டதால் நாட்டின் பொருளாதாரமே பெரும் பாதிப்புக்கு உள்ளாகியிருக்கிறது.

அத்தியாவசியத் துறைகளில் வேலை நிறுத்தம் என்பது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று. ஸ்டிரைக் செய்ய அவசியமின்றியே பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக் கொள்வது தான் விவேகம். ஆனால், இதற்குத் தேவைப்படுகிற பொறுமை, தேசபக்தி, கடமை உணர்வு, தியாக மனப்பான்மை போன்றவை இன்று ஊழியரிடையே காணப்படவில்லை. காரணம், தலைவர்களின் சுயநலம். அரசன் எவ்வழி, அவ்வழி மக்கள் என்பது ஆன்றோர் வாக்கு. தலைவர்கள் சுயநலத்தின் மொத்த உருவாகக் காட்சி தருகிறார்கள். இதனால் இவர்களுக்குத் தட்டிக் கேட்கின்ற அல்லது அறிவுரை வழங்குகின்ற தார்மிக பலம் இல்லாது போகிறது. சதி செய்து ஆட்சியைப் பிடிப்பதும், பொறுமை இழந்து ஆட்சியைக் கவிழ்ப்பதும், சுற்றம் கருதியோ, தேர்தலை உத்தேசித்தோ, கறுப்புப் பணம் குவிப்பதும், பினாமிச் சொத்துக்களை வைத்திருப்பதும் இன்று தலைவர்களிடையே சகஜமாகி, 'ஏன் நாமும்தான் அதர்மப் போக்கில் செல்வோமே!' என்ற எண்ணத்தை மக்களிடையே வளர்த்து விட்டன.

வேலை நிறுத்தம் செய்தால்தான், கிளர்ச்சியில் இறங்கினால்தான் நமது கோரிக்கைகள் கவனிக்கப்படும் என்ற எண்ணமும் இன்று பல துறைகளிலும் மக்களிடையே உருவாகி விட்டது. மவுண்ட் ரோட் காரியாலயத்தில் தபால்துறை ஊழியர்களின் சங்கத் தலைவர்களும் அதிகாரிகளும் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருக்கும் போதே கல்லெறிதல் நடந்ததும், பொதுச் சொத்துக்கள் நாசமானதும் இதைத்தான் நிரூபிக்கின்றன. ஆட்சியில் இருப்போருக்கு anticipation தேவை. நாளை என்ன நடக்கக் கூடும் என்பதை இன்றே ஊகித்து அதற்கேற்பச் செயல்பட வேண்டும். தீமைகளைத் தவிர்க்கச் சாமர்த்தியமாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். வன்முறை நடந்த பிறகு விட்டுக் கொடுப்பது என்பதற்குப் பதில், முன்னதாகவே விட்டுக் கொடுத்துப் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டதாக நல்ல பெயர் எடுக்கலாம் அல்லவா? இத்தகைய தொலைநோக்குப் பார்வை இல்லாதது பெரும் குறை.

ஊழியர்களின் கோரிக்கை ஏதேனும் அநீதியானது எனில் ஏற்கக் கூடாதுதான். நன்கு யோசித்த பிறகு விட்டுக் கொடுப்பதில்லை, உறுதியாக இருப்பது என்று தீர்மானித்தால் வந்தது வரட்டும் என்று இறுதிவரை பிடிவாதமாக இருக்கிற நெஞ்சுறுதி வேண்டும். இதுவும் இல்லை. நிலைமை எல்லை மீறிப் போகும் போது அரசு பணிந்து கொடுக்கிறது. 'ஓகோ நமது கிளர்ச்சிக்கு அரசு பயந்துவிட்டது' என்ற எண்ணத்தை இது தோற்றுவிக்கிறது. வெற்றி — தோல்வி மனப்பான்மைகள் உருவாகின்றன. மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் ஆட்சியில் யாருக்கு வெற்றி? அல்லது யாருக்குத் தோல்வி? இரண்டும் இல்லை என்பது மறக்கப்படுகிறது.

ஜனநாயகத்தில் அடக்குமுறை பயன் தராது. வன்முறையும் உதவாது. பரஸ்பரம் அன்பும் வற்புறுத்தலும்தான் காரியங்களைச் சாதிக்க வேண்டும். ஆட்சியில் இருப்போரும் சரி, அரசு ஊழியரும் சரி, மக்களுக்குச் சேவை செய்வதே தங்கள் முதல் கடமை என்பதை மறக்காமல் ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுத்துப் பரந்த மனப்பான்மையுடன் நடந்து கொள்ள வேண்டும்.

நண்பருடைய புத்தாண்டு வாழ்த்து தாமதமாகக் கிடைத்தது; தொழிலகங்களுக்குக் காசோலைகள் தாமதமாக வந்து சேர்ந்தன என்பதைவிட, தாமதத்துக்கு இடமளிக்கும் நமது மனப்பான்மைதான் முக்கியமான பிரச்னை. அது நாட்டையே குட்டிச்சுவராக்கும். நாடு என்பது நாம்தானே! நமது சீரழிவுக்கு நாமே துணை போகலாமா?

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஒரு அரசியல் கட்சி நீண்டகாலம் தொடர்ந்து பதவியிலிருக்க



பதவியில் ஏறியவுடன் நல்லோர்களை பாதிக்கும் சட்டம் ஏதேனும் இருந்தால் மாற்ற வேண்டும்.

ஏனென்றால் சட்டம் இயற்றியவர்களே சட்டத்தை நேரடியாக கையாள முடியாது.

சட்டத்தை கையாளுகின்றவர்கள் நல்லோர்கள். நல்லோர்கள் அல்லாதவர்கள் உடனடியாக வித்தியாசம் தெரியாமல் சில சமயங்களில் நல்லோர்கள் பாதிக்கப் படுகின்றார்கள். அதனால் அவர்கள் மனம் வருந்தி மனம் நோகும் பொழுது ஆளும் கட்சியை பாதிக்கின்றது! அதனால் பதவிக்கு ஆபத்து வருகின்றது. அதனால் நாட்டின் வளர்ச்சி தடைப்படுகின்றது. ஆகையால் உடனடியாக நல்லோர்களை பாதிக்கும் சட்டத்தைத் திருத்த வேண்டும்.

முடிந்தால்
*கிராண்ட் ஸ்வீட்ஸ்*
வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்



திருமண வைபவங்களுக்கு:
சீர்முறுக்கு, சீர் அதிரசம், சீர் தேன்குழல், முள்ளுத் தேன்குழல், அப்பம், திரட்டுப்பால், பருப்பு, தேங்காய் வகைகள் ஆர்டரின் பேரில் செய்து தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2-வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 600 020.
போன்: 412557

# தியாகபூமி:

## பெண் விடுதலைக்கு ஒரு படம்!

நடத்தை சரியில்லாத கணவனிடமிருந்து, விவாகரத்துக் கோரி, மனைவி வழக்காடுகிறாள். "இவருடன் சேர்ந்து வாழ என்னால் முடியாது; இவருக்கு ஜீவனாம்சம் தரவும் நான் தயாராயிருக்கிறேன்" என்கிறாள், ஒரு பெண், இன்றைக்கு இப்படிப் பேசினால் கூட, "அடேயப்பா என்ன துணிச்சல்!" என்று வியந்து போவோம். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இது எத்தகைய பரபரப்பையும் பெண்கள் உள்ளங்களில் பெருமிதத்தையும் ஏற்படுத்தியிருக்கும்.



• பாபாத் பூஜையும் சீதாவும்...

அந்தப் பெண் அத்துடன் நிற்கவில்லை. அவள் தந்தை அவளுக்கு அறிவுரை வழங்குகிறார்: "அம்மா! இந்தத் தேசம் தியாகங்களுக்குப் பேர் போனது. எத்தனையோ மகான்கள் எவ்வளவோ தியாகங்களைப் புரிந்து இதனைத் தியாக பூமியாக்கியிருக்கிறார்கள். நீ உன் கணவனுக்காகவும் குழந்தைக்காகவும் இல்லறத்துக்காகவும் சிறிது தியாகம் புரியக் கூடாதா?"

அப்போது அவள் சொல்கிறாள்: "அப்பா! நான் சுதந்திரத்துக்காக எவ்வளவு வேணுமானாலும் தியாகம் புரிவேன்; ஆனால் அடிமைத்தனத்துக்காக இம்மியளவும் விட்டுக் கொடுக்கவோ, தியாகம் புரியவோ மாட்டேன்!"

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால்



• சீதா

"தியாக பூமி" என்ற நாவலின் கதாநாயகி சாவித்திரிதான் இப்படிப் பேசினாள். பெண் அடிமைத்தனம் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட அன்றைய சமூகத்தில், அமரர் கல்கியின் இந்தக் கதாநாயகி, புயலாக உருவெடுத்தாள் என்றால், அந்த நாவலைத் திரைப்படமாக்கிய கே. சுப்பிர

மணியம், புயலைச் சூறாவளியாக்கினார்! தியாகபூமி நாவலும் திரைப்படமும் ஒரே சமயத்தில் உருவாகி, விடுதலைப் போராட்டத்துக்கு ஊக்கமளித்ததுடன், மூட நம்பிக்கைகளை ஒழிக்கவும் பெண் விடுதலைக்கு அறைகூவல் விடுக்கவும் முன் வந்தன.

திரைப்படத்தை அரசாங்கம் தடை செய்யப் போகிறது என்று தெரிய வந்ததும், சென்னை கெய்ட்டி தியேட்டரில் படத்தை இலவசமாக, இடைவிடாமல் திரையிட்ச் செய்தார் டைரக்டர் கே. சுப்பிரமணியம். கூட்டம் தாங்காமல் தியேட்டரின் வெளி மதில் இடிந்து விழுந்தது! போலீஸார் வந்த போது, திரைப்பட ரசிகர்களுக்கும் போலீஸாருக்கும் இடையே நடந்த மோதலில் ஒருவர் பலியானார்!

ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு அதே தியாகபூமியை ஹிந்தியில் டெலி சினிமாவாக எடுத்திருக்கிறார் டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் மகன் எஸ். கிருஷ்ணசாமி. ட.வி.யில் இம்மாதம் 15 ஆம் தேதி தேசிய அலைவரிசையில் ஒளிபரப்பாகியது.

கிராமத்தில் பிறந்து வளர்ந்து, பலவிதத் துன்பங்களுக்கும் உள்ளாகி, ஓர் எதிர்பாராத திருப்பம் காரணமாக உமா ராணியாக உருமாறி, நாட்டின் சுதந்திரத்துக்கும் பெண் சுதந்திரத்துக்கும் போராடும் சாவித்திரியின் பாத்திரத்தை, நன்கு உணர்ந்து நடித்திருக்கிறார் புதுமுகம் கீதா. இவர் டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் பேத்தியும் கூட! குழந்தை சாருவாக அந்நாளில் ''பேபி'' சரோஜா நடித்த பாத்திரத்தில், இன்று தோன்றும் அபர்ணா, பார்ப்பவர் மனங்களைக் கொள்ளை கொள்கிறாள். சம்பு சாஸ்திரியாக, அன்று பாபநாசம் சிவன் நடித்த பாத்திரத்தில், இன்று பிரபல ஹிந்தி நடிகர் பாரத் பூஷண் சிறக்கிறார். பூர்ணம் விசுவநாதன், பாப்லூ, சச்சு, சாந்தி கணேஷ் முதலியவர்கள் அருமையாக ஒத்துழைத்திருக்கின்றனர். ஹிந்திப் படமான போதிலும், கர்நாடக இசையில் தமிழ்ப் பாடல்களும் இடம் பெற்று ரசனையை வளர்த்து, ஒருமைப்பாட்டுக்கும் உதவுகின்றன. புதிய வீடியோ நுணுக்கங்கள் கைகொடுக்கின்றன எனில் ராஜாஜி, காந்திஜி, நேருஜி ஆகியோரது பழைய சினிமாக் காட்சிகள் அளவோடு, பொருத்தமாகச் சேர்க்கப்பட்டிருப்பது மெய் சிலிர்ப்பை ஏற்படுத்துகின்றன.

முப்பதுகளின் சூழ்நிலைகளை மறக்காமல் படம் எடுக்கப்பட்டிருந்த போதிலும், தொண்ணூறுகளிலும் தியாகபூமி விடுக்கும் செய்தி பொருந்துகிறது என்பது, ஆச்சரியத்தையும் விசனத்தையும் ஒருங்கே அளிப்பதாகும்.

— கி. ராஜேந்திரன்

# ஆட்சி ஏன் வீழ்ச்சி அடைந்தது?



● அன்று 'மூட்' சரியில்லாத காரணமாகத்தான் இருக்கும், வரலாற்று ஆசிரியர் பாடமே நடத்தாமல் திடீரென்று கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்! முதல் இரண்டு கேள்விகளுக்கு நானும் என் அருகில் இருந்த மாணவனும் பதில் கூற முடியாமல் விழித்து, உள்ளங்கை நீட்டிச் சுளீர் அடி பெற்றுக் கொண்டோம்.

வரிசைப்படி அடுத்த மாணவனிடம் மூன்றாவது கேள்வியைக் கேட்டார் வரலாற்று ஆசிரியர்: ''பல்லவர் ஆட்சி ஏன் வீழ்ச்சி அடைந்தது?'' அந்த மாணவன் அடிக்குப் பயந்து கொண்டு ஏதாவது ஒரு விடையைக் கூறி வைப்போம் என்ற எண்ணத்தில், ''பல்லவர்கள் சரியாகச் சாப்பிடாததால் நாளடைவில் நலிந்து மெலிந்து வீழ்ச்சி அடைந்தனர்!'' என்று கூற, ஆசிரியர் சட்டென சிரித்துவிட்டதுடன், அவர் 'மூட்' மாறிவிட, பிறகு உள்ளங்கைகள் பழுக்கவில்லை!

— டி. வெங்கட், ஆனத்தூர்.

● ''கிரிக்கெட் ஆட்டக்காரங்களைக் கண்டால் கட்டோடு பிடிக்கலைன்னு சொல்றீங்களே, ஏன்?''



''சுத்தக் கஞ்சப் பேர்வழிங்க. பந்தைத் தாங்களே ஓடிப்போய்ப் பொறுக்கறாங் களே; டென்னிஸ் ஆட்டக்காரங்க மாதிரி அதுக்கு இரண்டு பையன்களை வேலைக்கு வைச்சுக்கக் கூடாது!?''

— பா. கணேசன், சென்னை — 64.

● என் கடைசி (மூன்றாவது) பெண்ணின் கல்யாணம் சென்ற வருஷம் நடந்தது. அவள் கல்யாண விடியோவைப் போட்டுப் பார்த்த கையோடு, இரண்டாவது பெண்ணின் கல்யாண விடியோவையும் போட்டுப் பார்த்த பிறகு எழுந்து விட்டோம். உடனே என் இரண்டாவது பெண்ணின் மூன்று வயதுப் பெண் குழந்தை தன் பெரியப்பாவிடம் சென்றாள். என் மூத்த பெண்ணின் திருமணத்தின் போது விடியோ பிரபலமாகாததை அறியாத அந்தக் குழந்தை, ''பெரியப்பா! நீங்க மட்டும் பெரியம்மாவைக் கல்யாணமே பண்ணிக் கலையா?'' என்று கேட்டாளே பார்க்கலாம்!

குபீரென்று சிரித்ததோடு நில்லாமல், புகைப்பட ஆல்பத்தைக் கொண்டு வந்து காண்பித்துக் குழந்தையைத் திருப்திப் படுத் தினோம்!

— எஸ். சுந்தரி, சென்னை — 4.





● ''ஆனாலும் உனக்குப் பரந்த மனசு தானப்பா. கத்தியைக் காட்டி மிரட்டி, பர்ஸ், வாட்ச், மோதிரம் எல்லாத்தையும் பிடுங்கிக்கிட்டாலும், போனால் போகு துன்னு ஒரு நூறு ரூபாயை என் கையிலே கொடுத்து அனுப்பறியே!''

''இது உனக்கில்லே நயினா, எப்படியும் போலீஸ் ஸ்டேஷன் போய் புகார் கொடுக் கத்தானே போறே. அப்படியே இந்த மாமூலை அரைபிளேடு அழகிரி கொடுத்த தாகச் சொல்லி இன்ஸ்பெக்டர் ஐயா கிட்ட சேர்ப்பிச்சுடு!''

— ப. தங்கவேலு, மைசூர்.



● அந்த இளம் பெண்ணை, பஸ்ஸில் அந்த மனிதர் திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டேயிருந்தார். 'இந்த ஆள் இது வரை பெண்ணையே பார்த்ததில்லையோ?' என்று எண்ணுமளவுக்கு அவர் போக்கு அருவருப்பை அளித்தது. இறங்க வேண்டிய ஸ்டாப்பில் அந்த இள நங்கை பஸ்ஸிலிருந்து வெளியேறி நடக்க, அப்போதும் அவர் ஜன்னல் வழியே தலைநீட்டிக் கழுத்தை ஒடித்துத் திரும்பிப் பார்த்தார். அப்போது ஒரு பயணி, ''கண்டக்டர்! கழுத்துச் சுளுக் குக்கு ஃபர்ஸ்ட் எய்டு பாக்ஸில் மருந்து வைச்சிருக்கீங்களா?'' என்று உரக்கக் கேட்கவும் பஸ்ஸிலிருந்த எல்லோரும் புரிந்து கொண்டு சிரித்த சிரிப்பில் பஸ்லே ஆட்டம் கண்டது!

— சீத. கருணாநிதி, மருதூர் தெற்கு.

●● நீண்ட காலமாகக் காய் விட்டிருந்த இளையராஜாவும் கோவைத்தம்பியும் இப்போது பழமாகி விட்டார்கள்! பழமாக்கியவர் கோவைத் தம்பியின் பதினைந்து வயது மகன் மோகன்துரை. 'இளையராஜாவை வைத்தே படம் பண்ணுங்கள் அப்பா!' என்று மோகன்துரை சொன்னதைக் கோவைத் தம்பி காதில் போட்டுக் கொள்ளாமலே இருந்தார். அதனால் ஏகப்பட்ட நஷ்டம். தந்தை நஷ்டப்படுவதைப் பார்க்கச் சகிக்காத தனயன், அப்பாவுக்குத் தெரியாமல் இளையராஜா



* 'உன்னை வாழ்த்திப் பாடுகிறேன்': பார்க்கும் போதே சமாதானம் தெரிகிறதே!

# காயாக இருந்தவர்கள் பழமான ரகசியம்!

வைச் சந்தித்து, விஷயத்தைச் சொல்லி அழுதிருக்கிறார். இளைஞனின் அழுகையில் நெகிழ்ந்து போன ராஜா பழம் விடச் சம்மதித்து விட்டார். விஷயத்தைக் கேள்விப்பட்ட கோவைத்தம்பியும் சமாதானத்திற்குக் காரணமான மகனையே தயாரிப்பாளராக்கி, 'உன்னை வாழ்த்திப் பாடுகிறேன்' என்று ராஜாவிடம் சமாதானமாகி விட்டார்! ஆக, பெண்களின் கண்ணீர் தான் சாதிக்கும் என்பதில்லை; ஆண்களின் கண்ணீரும்தான்!

●● 'மதிலுகள்' நினைவிருக்கிறதா? அடூர் கோபாலகிருஷ்ணன் இயக்கி, அவார்டு வாங்கிய மலையாளப் படம். என்.எப்.டி.சியும் தொலைக்காட்சி நிலையமும் சேர்ந்து, தொலைக் காட்சிக்காகத் தயாரிக்கப்பட்ட படம்தான் என்றாலும் அதைத் தியேட்டர்களிலும் ரிலீஸ் செய்தார்கள். வசூல் அள்ளிக் கொண்டு போனது. தமிழிலும் தொலைக்காட்சியும் என்.எப்.டி.சி.யும் கூட்டாகத் தயாரித்த 'மறுபக்கம்' வெளிவரப் போகிறது. இந்திரா பார்த்தசாரதியின் 'உச்சி வெயில்' நாவல்தான் கே.எஸ். சேதுமாதவன் டைரக்ஷனில் மறுபக்கமானது. 'நாளை நமதே' படத்திற்குப் பிறகு, தமிழ்ப் படவுலகம் மக்கர் செய்யவே, மலையாளத்தின் பக்கம் போனார் சேதுமாதவன். இப்போது 'மறுபக்கம்' மூலம் மீண்டும் தமிழுக்கு வருகிறார்.

●● தமிழ்த் திரைப்பட வர்த்தக சபைத் தலைவர் கே. ஆர். முதலில் டைரக்டராகும் ஆசையோடுதான் சினிமாவுக்குள் நுழைந்தார். வசதியானவர் என்பதால், யாரையும் எதிர்பார்க்காமல் சொந்தப் பணத்தைக் கொண்டே 'சிரித்தில் ஒரு வசந்தம்' என்ற மலையாளப் படத்தைத் தயாரித்து டைரக்ட் செய்தார். ஆனால், இவர் படத்தை எந்த விநியோகஸ்தரும் வாங்க முன்வரவில்லை என்பதால் தாமே விநியோகஸ்தராகவும் மாறினார். அப்படியும் ஒரு சிக்கல்: திரையிடுவதற்குத் தியேட்டர் எதுவும் கிடைக்கவில்லை. பார்த்தார் மனுஷர்! சொந்தமாக ஒரு தியேட்டரையே விலைக்கு வாங்கித்



* கே. ஆர்.: டைரக்டர்!

தமது படத்தை ரிலீஸ் செய்தார். அதன் தொடர்ச்சியாக எண்பத்தேழு தியேட்டர்களை இப்போது லீசுக்கு எடுத்து நடத்திக் கொண்டிருக்கிறார். கைவசம் நிறையத் தியேட்டர்கள் இருக்கும் போது டைரக்ட் செய்ய இனியென்ன தடை? உற்சாகத்தோடு, 'ஈரமான ரோஜாவே' என்று இப்போது தமிழில் டைரக்ட் செய்கிறார்!

தொகுப்பு: **எஸ். பாலு.**

# தரகு

"என்ன தம்பி இவ்வளவு யோசனை பண்றிய? நீங்க தயங்கவே தேவையில்லே. இந்த மாட்டுத் தரகன் மாடசாமி சொன்னால், ஒரு அட்டியும் இராது. நம்ம திருநெல்வேலி ஜில்லாவிலேயே, சுழி சுத்தம் பாத்து, மாடு வாங்கித் தர்றது இந்த மாடசாமி ஒருத்தன் மட்டும்தான். தயங்க வேணாம் தம்பி..." என்றார் தரகர் மாடசாமி.

ஆனால், பொன்னையாவின் முகத்தில் அத்தனை திருப்தி இல்லை.

"எல்லாம் சரி தரகரே. கிடேரி 'பலப்பட்'டுக்காது போலத் தோணுதே!" என்றான் மெதுவான குரலில்.

"நல்லாச் சொன்னீங்க தம்பி. நானில்ல இதோட போய் 'மாடு சேர்த்த'வன். சரியாய் ஆறு மாசமாச்சு. இன்னம் நாலு மாசத்திலே லிட்டர் லிட்டராய் நீங்க பால் கறக்கலாம்" என்றார் தரகர்.

"ஆறு மாசச் செனைன்னா சொல்றீங்க? மாட்டைப் பார்க்கிறப்ப அப்படித் தெரியலியே."

"தம்பி, இது கலப்பு மாடு. நாட்டு மாடும் இல்லே; சீமை மாடும் இல்லே. நாட்டு மாடுன்னா கொட்டாப் பொட்டி போல வயிறு தெரியும். சீமை மாடுன்னா கடாரப் பொட்டி போல வயிறு தெரியும். இதுவோ கலப்பு மாடு. அம்மி போல ஒட்டிக் கெடந்தாலும் 'பலப்பட்ட' கிடேரிதான். பாருங்க. இன்னம் நாலு மாசத்திலே இதோட பாலைச் சாப்பிடப் போறீங்க. ஒரு யோசனையும் பண்ண வேணாம் தம்பி. வாங்கிட்டுப் போங்க. தொழுவே நிறைஞ்சாப்ல தெரியும்."

பொன்னையாவின் முகத்தில் திருப்தி தெரியவில்லை.

"சீமை மாடுன்னாலும் பரவால்ல. கஷ்டப்பட்டதுக்குப் பலன் இருக்கும். இது... இது..." என்று தயக்கம் காட்டிய பொன்னையாவை இடைமறித்து,

"நீங்க ஒண்ணு தம்பி. நாட்டு மாடுன்னா செம்பு வச்சுத்தான் பால் கறக்கணும். ஒரு லிட்டர் தேறாது. ஆனால் வேலை சுலபம். பாலைக் கறந்துட்டு அவுத்து விட்றலாம். காட்ல மேஞ்சுட்டு வந்துரும். தீவனம் போடுறது கஷ்டமில்லே. போட்டதைத் தின்னும். தண்ணி குடிக்கும். சீமை மாடுன்னா வெயில் படாம பார்க்கணும். வேளை தவறாமல் குளிப்பாட்டணும். மூட்டை மூட்டையாய் மாட்டுத் தீவனம் வாங்கியாகணும். பச்சைப் பிள்ளையைப் பேணுறாப்ல பேணணும். ஆனால் பாலாய்க் கொட்டத்தான் கொட்டும். சிரமல்லா படணும் அதுக்கு! இது மாதிரி கலப்பு மாடுன்னு வச்சுக்குங்க. அத்தனை சிரமமிராது. பாலும் தாராளமாய்க் கறக்கும். சீமை மாடு அளவு கறக்கலேன்னாக் கூட அதிகமாய்க் குறைஞ்சிடாது. கவனிப்பும் அதிகம் இல்லே. பேசாம வாங்கிட்டு போய்த் தொழுவுல கட்டுங்க தம்பி. எண்ணி நாலே மாசம்தான். வீடெல்லாம் பாலாய் இருக்கும். கொஞ்சம் விற்கக் கூடச் செய்யலாம். மாட்டுத் தீனிச் செலவைச் சரிக்கட்டிட்டுப் போகும். யோசனையே வேணாம். பேசாம அட்வான்ஸ் கொடுத்திறலாம்..." என்றார் தரகர் மாடசாமி.

அரை மனத்தோடுதான் அட்வான்ஸ் கொடுத்தான் பொன்னையா.

"நீங்க அத்தனை தூரம் எடுத்துச் சொன்னீங்களேன்னுதான் அந்தக் கிடேரியைப் பிடிச்சிட்டுப் போனேன். நீங்க சொன்ன கெடு நாலு மாசம்தான். ஆனால், மாசம் அஞ்சு ஓடிருச்சு. கிடேரி மட்டும் ஈனுறதாய் இல்லே. செனையாய் இருந்தால்ல ஈனியிருக்கும்! வெத்து மாடு எப்படி ஈனும்? இப்ப தண்ணிப் பாலை ஒண்ணுக்கு ரெண்டு விலை குடுத்து வாங்குறேன். வெத்து மாட்டுக்குத் தீவனச் செலவு ஒருபுறம், வீட்டுக்குப் பால் செலவு ஒருபுறம்..."

"என்ன பண்ணலாம் தம்பி, சமயத்திலே இப்படித்தான், கணக்கு பிசகிடுது! 'மாடு சேர்க்க'ப் போனது நாளாக்கும். சரியாச் சேரலை போலிருக்கு. அதனாலே என்ன, நாளைக்குக் கிடேரியோட வாங்க. மாடு சேர்க்க வேணாம். செனை ஊசி போட்டுறலாம்."

"அப்புறமும் பத்து மாதம் பால் வாங்கியாகணுமே!"

"ஏன் வாங்கணும்? டிகிரி காப்பி போட நானில்ல வழி சொல்றவன்! சங்கனாபுரத்திலே ஒருத்தர் வீட்ல அயனான சீமைப் பசு நிற்கிது. ரெண்டாம் ஈத்து. முதல் ஈத்துக்கே ஏழு லிட்டர் கறந்திருக்கு. இன்னம் ரெண்டு மாசத்திலே ஈனிரும். வாங்கிருவோமா?"

"ஈனிறட்டும். தாயும் பிள்ளையுமாய் வாங்கிறலாம்."

"தம்பிக்கு விஷயம் தெரியாதா? மாடு ஈனின பிறகு ரேட் கூடிரும். இப்ப மூவாயிரம் சொல்றவன் அப்புறம் நாலாயிரம் கேப்பான். ரெண்டு மாசக் கெடுவுல

உமாகல்யாணி



ஆயிரம் ரூபாயை ஏத்திருவான். அப்படி வீணாய்க் குடுக்கணுமா? அது அயனான சினைப் பசு. பண்டுவம் பார்க்கணுமேன்னு மலைக்காதீங்க. என்ன, வெயில் வேளையிலே ரெண்டு தரம் குளிப்பாட்டப்போறீங்க. வெயில் படாம பாத்துக்கப் போறீங்க. ஸ்பெஷலாய் மாட்டுத் தீவனம் வாங்கிப் போடணும். இவ்வளவுதானே, பாலாய்ச் சொரியுமே! கலப்பு மாடுக, நாட்டு மாடுக கூட இப்ப கரிசனம் பண்ணாம பாலைக் கண்ல காட்றதே இல்லே. அதுக்குச் சினை மாடு தேவலாமே. சிரமப்பட்டாலும் பாலாவது நல்லபடியாக் கறக்குமே. போலாம் புறப்படுங்க. மாட்டை வச்சிருக்கிறவன் ஏதோ முடையாய் இருக்கான். இல்லேன்னா எட்டு மாசச் சினைப் பசுவை எவன் விக்கணும்னு வருவான்? அஞ்சு பத்து வெட்டி வாங்கித் தர்றேன். வாங்க தம்பி போலாம்...''

''ஈனின பிறகு பாப்பமே!''

''அட, என்ன தம்பி நீங்க? ஈனிட்டால் ரேட்டே வேறே. கூடுதலாய் அழுணும்.''

''ஈனிருமா ரெண்டு மாசத்திலே?''

தரகர் சிரித்தார்.

''என்ன தம்பி சொல்றீங்க? எட்டு மாசக் கர்ப்பம் உள்ளேயே தங்கிடுமா?''

''போன தடவை கலப்புக் கிடேரி வாங்கினப்பவும் இப்படியே சொன்னீங்க! ஆறு மாசம் கர்ப்பம்னு அடிச்சுச் சொன்னீங்க. இப்ப அஞ்சு மாசம் ஓடியும் கர்ப்பம் வெளிப்படாம உள்ளேயே தங்கிருச்சு போலருக்கே!''

''கிண்டல் பண்றியளா தம்பி! சமயத்தில் கணக்குப் பிசகுறதுதான். இப்ப பிசகாது. ரெண்டே மாசம்தான். பாலாய்ச் சாப்பிடப் போறீங்க. வேளைக்குத்தீனி போட்டு சம்ரட்சணை பண்ணினீங்களோ, கண்டிப்பாய்ப் பத்து லிட்டர் கறக்கலாம். கொரண்டி நான் தம்பி.''

''ஒருவேளைக்கா பத்து லிட்டர்?''

''சினைப் பசுல்லா! சந்தேகமே வேணாம். வேளைக்குப் பத்துக் கறந்துடும்.''

''அப்ப சரி.''

''வாங்க தம்பி, இப்பவே போயிறலாம்.''

போகிறபோதே, ''வேணாச் சொல்லுங்க, அந்த வெத்துக் கிடேரியை எவன் தலையிலே யாவது கட்டி விட்றலாம். வீணாய் வீட்ல கட்டித் தீனி போடுவானேன்?'' என்றார் தரகர் மாடசாமி.

''ஆமா... அதுங்கூட நல்ல யோசனை தான்...'' என்றான் பொன்னையா.



# நிஜ நாடகம்

தளதளவென்று சூல் கொள்ளும் தருணத்தில் இருக்க வேண்டிய நெல் பயிர், வயலும் வாய்க்காலும் வறண்டதால், கருண்டு கருகிப்போகும் ஆபத்து வந்தது.

காலையிலேயே வயல்வெளிப்பக்கம் போன கிராமவாசிகள், டீக்கடை வாசலில் ஒன்று திரண்டார்கள். ஆற்றிலும் வாய்க்காலிலும் உடனடியாகத் தண்ணீர் வா வேண்டும். என்ன செய்யலாம்? ஆளுக்கு ஆள் பேசினார்கள். அது யோசனையாகவும் இருந்தது. ஆத்திரமாகவும் இருந்தது.

''இப்போ ஆத்துத் தண்ணியை நம்பிச் சாகபடி இல்லேன்னு ஆகிப் போச்சு. இந்தப் பாழாப்போற மானமாவது நேரம் பார்த்துப் பெய்யக் கூடாதா...?''

''அது சரி... மானம் என்ன... நீ கட்டி வச்ச பொண்டாட்டியில்லே, முகம் பாத்துச் சோறு போட...? வேலையைப் பாருய்யா. வர்ற தண்ணியை ஒழுங்கா முறை வச்சுக் கொடுத்தாலே மண்ணை ஈரமாக்கிக்கலாம். இந்த லஸ்கரைக் கேட்டா இன்னிக்கு இந்த வாய்க்காலுக்கு முறை.. நேத்து அந்த வாய்க்கா முறைங்கிறான். சரிப்பா... எங்க வாய்க்காலுக்கு எப்ப முறைன்னு கேட்டா நாளைக்குங்கறான்...''

''ஆமா... போ. இந்தப் பசங்க இப்படித் தான் சொல்வானுங்க. போன முறையும் இப்படித்தான் இன்னிக்கு நாளைக்குன்



னான். அப்புறம் கேட்டா, ஆத்திலேயே முறை முடிஞ்சு போச்சு: அப்புறம் எப்படி உங்க வாய்க்காலுக்குத் தண்ணி வரும்னுட்டான். எங்கேயோ அவனுக்கு வேண்டியவன் வயல்பக்கமா தண்ணிய மாத்தி விட்டுட்டான். அவன் சொன்னதையே கேட்டுக்கிட்டிருந்தா வயக்காடு சாம்பலாய்ப் போறதத் தவிர வேற வழியே இல்லே...''

மௌனம் அவர்களைச் சூழ்ந்தது. ஒருவன் கரகரத்த ஆனால் சூடான குரலில் அதைக் கலைத்தான்.

''இதப் பாருங்கப்பா. இப்படி எல்லாருமா கையைக் கட்டிக்கிட்டு மயிலே மயிலேன்னா இறகா போடும்? பேசாம நான் சொல்றபடி செய்யத் தயார்னு சொல்லுங்க., உடனே வாய்க்கால்லே பொங்கப் பொழிய தண்ணி வருதா இல்லியான்னு பாருங்க...''

''என்ன செய்யணுங்கிறே...?''

''நாளைக் காலையிலே பஸ்ஸை மறிச்சிட வேண்டியதுதான்...''

''பஸ் மறியலா...?'' நம்ம ஊருக்கு தண்ணி வராததுக்கும் பஸ்ஸுக்கும் என்ன சம்பந்தம்...?''

''ரெண்டு நாளைக்கு முன்னாடி மாலூர்லே என்ன செஞ்சான். வாய்க்கால்லே தண்ணி வரலே. திடீர்னு பத்துப் பசங்க கூடி, ரோட்டிலே போற பஸ்ஸை மறிச்சானுங்க. உடனே பாக்கணுமே. அடுத்த இரண்டு மூணு மணி நேரத்திலே உலகத்திலே உள்ள அத்தனை அதிகாரிங்களும் வந்துட்டாங்க. பேச்சு வார்த்தை நடந்துச்சு. முடிவா முறையே இல்லாம சேர்ந்த மாதிரி ரெண்டு நாளைக்கு அந்த ஊரு வாய்க்காலுக்கு முழுக்க முழுக்கத் தண்ணி விடறதா ஒத்துக்கிட்டாங்க..''

''அதெப்படிண்ணே முடியும்? முறையில்லாம தண்ணி விடறதுன்னா வேற ஊருக்குப் போற தண்ணியை நிறுத்தினாத்தானே அவங்களுக்கு விட முடியும்?''

''யார்டா இவன்... அதைப் பத்தி நமக்கென்ன? நம்ப ஊருக்கு தண்ணி வந்தாச் சரிதான்...''

கொஞ்சம் அமைதி. பஸ் மறியல் செய்யலாமா, வேண்டாமா என்பது போல.

நின்றவர்களில் வயதில் அதிகமானவரான சாம்பசிவம் ஒரு யோசனை சொன்னார்.

''தம்பி சொல்றதும் சரிதான். காலம் அப்படி மாறிப் போச்சு. உண்ணாவிரதம் உண்ணாவிரதம்னா இப்ப யாரும் திரும்பிப் பாக்கிறதில்லே. பஸ் மறியல்னாத்தான் மேலே இருக்கிறவங்களும் உடனே வர்றாங்க. இருந்தாலும் எனக்கொண்ணு தோணுது. இன்னைக்கு நாம சில பேரு போயி எஞ்சினியரைப் பார்ப்போம். நிலைமையைச் சொல்வோம். அவரு ஒண்ணும் செய்யலைன்னா அப்புறமா பஸ்ஸை மறிப்போம்...''

இந்த யோசனை அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

அன்று மாலை.

பி.டபிள்யூ.டி. ஜூனியர் எஞ்சினியர், கிராமவாசிகள் பின்தொடர வாய்க்கால் தலைப்பில் நின்று வயல்வெளியைப் பார்த்தார். அவர் முகம் சட்டென்று இருண்டு போனது.

சடாரென்று செருப்பைக் கழற்றி மதகின் மீது வைத்து விட்டு வெறுங்காலுடன் வயலுக்குள் இறங்கி நடந்தவர், அப்படியே தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

கூட வந்தவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. சட்டென்று அவருக்கருகில் ஓடி ''ஐயா... என்ன ஆச்சுங்க? என்ன செய்யுதுங்க?'' என்று பதற்றத்துடன் அவரைத் தூக்கினார்கள்.

எஞ்சினியர் வெடுக்கென்று கைகளை உதறி விட்டார்.

''அடச்சே... கையை விடுப்பா. நீங்கள்லாம் விவசாயிங்கதானா? இல்லே.. தெரியாமத்தான் கேக்குறேன். ங்கொப்புறானே. உடம்பெல்லாம் கத்தியாலே கீறின மாதிரி வயலே பாலம் பாலமா வெடிச்சுக் கிடக்கு. பயிரே கருகிப் போச்சு. இதையெல்லாம் பாத்துட்டு எப்படீங்க சாப்பிடறீங்க...

உத்தமசோழன்

தூங்குறீங்க.. ச்சே.. ஒரு ரூபா பஸ் சார்ஜ்லே ஒரு அஞ்சு மைல் தூரத்திலேதான் நானிருக்கேன். எங்கிட்ட ஓடி வந்து ஒரு வார்த்தை... ஒரே ஒரு வார்த்தை சொல்லியிருந்தா... இப்படி ஆகியிருக்குமா? எங்கிருந்தாவது தண்ணி கொண்டாந்திருக்க மாட்டேன்...'' சொல்லிச் சொல்லி மாய்ந்து போனார் அவர். அங்கிருந்த அனைவருமே தாங்கள் ஏதோ பெரிய தவறு செய்து விட்டதைப் போல் சங்கடப்பட்டார்கள்.

''சொல்லியிருக்கலாம்தான். மேஸ்திரிகிட்டக்கூட சொன்னோம்...''

''இதுக்கு மேலே ஏதும் பேசினீங்க எனக்குக் கெட்ட கோபம் வரும். மேஸ்திரிகிட்டே சொன்னாங்களாம். மேஸ்திரிகிட்டே... ச்சே... நான் ஒருத்தன் இருக்கிறதே உங்களுக்கு மறந்து போச்சாக்கும். எங்கிட்டே சொல்லியிருந்தா முறையாவது இறையாவது... எங்கிருந்தாவது எப்படியாவது தண்ணி கொண்டாந்திட்டுல்ல மறு வேலை பாப்பேன்.. சரி.. சரி. உங்ககிட்டே பேசிக்கிட்டிருக்கிற நேரத்திலே நான் போய் தண்ணி விடற வழியைப் பாக்குறேன். இப்பவே ஈ. ஈ. கிட்டே போன்லே பேசறேன்.''

அவர் படபடப்புடன் திரும்பி வந்தார். ரோடு வரும் வரை செருப்பைக் கையிலேயே எடுத்துக் கொண்டார். வயல் வரப்பில் செருப்பு போட்டு நடப்பது அவர்களுக்கு பிடிக்காது என்பது அவருக்குத் தெரியும்.

பஸ் மறியல்தான் ஒரே வழி என்று சொன்ன இளைஞன் தயங்கியபடியே எஞ்ஜினியரிடம் சொன்னான்.

''சார்... கொஞ்சம் இப்படி நிழல்லே உக்காருங்க. இளநி வெட்டச் சொல்றோம். குடிச்சுட்டுப் போகலாம்...''

''இளநியா... ! இப்படிப் பயிரு கருகிக் கிடக்கிறதைப் பாத்தப்புறமும் என்னாலே இளநி குடிக்க முடியும்னு எப்படிங்க நினைக்கிறீங்க...? அந்த நேரத்திலே உங்க வாய்க்கால்லே பாதி தூரமாவது தண்ணி வந்து சேர்ற வழியைப் பார்ப்பேன்...''

ஊர்ப் பெரியவர் அப்படியே நெகிழ்ந்து போனார்.

''ஐயா... இத்தனை வருஷத்திலே எங்க கஷ்டத்தைப் புரிஞ்சுக்கிட்டு கலங்கிப் போன ஒரே ஆபீஸரு நீங்கதாங்க. இன்னும் ஒரு வாரத்துக்கு எங்களுக்குத் தண்ணியே வரலைன்னாலும் பரவாயில்லீங்க. இப்ப எங்களுக்காக ரெண்டு வார்த்தை இதமாச் சொன்னீங்க பாருங்க... அதுவே போதுங்க...''

அதற்குள் ஒருவன் இரண்டு மூனு இளநீருடன் ஓடி வந்தான். ஆனால் எஞ்ஜினியரோ 'நீங்களே குடிங்க' என்பது போல் ஜாடை காட்டி விட்டுத் தமது ஜீப்பில் ஏறிப் போய் விட்டார்.

ஊராருக்கோ விவரிக்க இயலாத பரவசம்..

**அ**வர் அப்படிப் போனதிலிருந்து எத்த வாய்க்காலை அடைத்து எத்தனை கன அடி தண்ணீர் விடச் சொல்லப் போகிறார் என்று எஞ்ஜினியர் உத்திரவுக்காக அந்தப் பகுதியின் பாசன மேஸ்திரி தன் வீட்டு 'கனால்' போனிற்கு அருகிலேயே காத்துக் கிடந்தார். பலனில்லை.

கடைசியாய் பொறுமையிழந்து போய் அவரே ஜூனியர் எஞ்ஜினியருடன் பேசினார்.

''சார்... தெக்கூர் வயல்லாம் கருகிப் போச்சு. ஏதாவது தண்ணி விட்டாகணும்னு நேத்தே உங்ககிட்டச் சொன்னேன். நீங்கதான் கேக்கலே. இன்னிக்கு வந்து பாத்ததும் நீங்களே துடிச்சுப் போயிட்டீங்க. இப்ப என்ன செய்ய...? அந்த மேட்டுக் கோட்டகத்திற்கு முறை முடிஞ்சும் இன்னும் ஓடிக்கிட்டிருக்கு. அதை மாத்தி தெக்கூர் வாய்க்கால்லே நூத்துக்கு நூத்தியிருபது கன அடியாத் தண்ணி விட்டோம்னா ஒன்றரை நாளில் ஊரே பாய்ஞ்சுடுங்க...''

''அட... நீ ஒரு விவரம் புரியாத ஆளுய்யா... நான் அங்கே அப்படிப் பேசலைன்னா... மேட்டுக் கோட்டகம் வாய்க்கால்லே முறை மீறித் தண்ணி விடறது தெரிஞ்சவன் எவனாவது ஒருத்தன் பிலுபிலுன்னு புடிச்சுக்கிட மாட்டான்? நான் அங்கே பேசின பேச்சுக்கு, தண்ணி வேணும்னு கேட்டுக்கிட்டு உங்கிட்டயோ, எங்கிட்டயோ இன்னும் ரெண்டு நாளைக்கு எவனும் வர மாட்டான். அதுக்குள்ளே மேட்டுக் கோட்டகத்திற்கு வேணும் வேண்டாம்னு பாய்ஞ்சுடும். வேற வேலை இருந்தாப் பாரு. மேட்டுக்கோட்டகம் பெரிய பண்ணை நமக்கு எவ்வளவோ நல்லது கெட்டது செய்யுறாரு. அதை விட்டுட்டு... நீ ஒரு பைத்தியம்யா...''

மேஸ்திரி காதில் தொங்கிய ரிஸீவருடன் மயக்கமாகிப் போனில் சாய்ந்தார்.

''நம்ம ஊர்ல பஸ் ஸ்டாண்ட் கட்டறதுக்கு மூனு லட்ச ரூபாய் ஒதுக்கி இருந்ததாகச் சொல்றீங்க. ஆனால் பஸ் ஸ்டாண்ட்ல இரண்டு சிமெண்ட் பெஞ்ச் மட்டும்தானே போட்டிருக்காங்க?''

''ஆளாளுக்குக் கமிஷன் அடிச்சது போக மிச்சப் பணத்துக்கு சிமெண்ட் பெஞ்ச் மட்டும்தான் போட முடிஞ்சதாம்!''

— எஸ். முகம்மது யூசுப்.





# இவர் நடந்தால் ஊர்வலம்; நின்றால் பொதுக் கூட்டம்!

தேர்தல் வந்து விட்டால் கன்னியாகுமரி மாவட்டத்தையே 'கலைகட்டச்' செய்து விடுவார் எழுபது வயதை எட்டிப் பிடிக்கும் ஒருவர். கதர் ஜிப்பா, கதர் வேஷ்டி, கதர்க் துல்லாய் அணிந்த அவர், அவரை விட வயதான, துருப்பிடித்த சைக்கிள் ஒன்றை உருட்டிக்கொண்டு வருவார்.

சைக்கிளின் வலது பக்க ஹேண்டில் பாரில்,ஒரு பை தொங்கிக்கொண்டிருக்கும். அதில், அவர் தேர்தலில் போட்டியிடும் அறிவிப்பைத் தாங்கிய போஸ்டர்கள் தூங்கிக்கொண்டிருக்கும். கேரியரில் போஸ்டர்கள் ஒட்டத் தேவையான பசை வாளி ஒன்று இருக்கும்.

திடீரென்று மக்கள் அதிகமாகக் காணப்படும் இடத்தில், ஸ்டாண்ட் இல்லாத தமது சைக்கிளை ஓர் ஓரமாகச் சாய்த்து வைத்துக் கொண்டு, போஸ்டரையும், கை நிறையப் பசையையும் எடுத்துக் கொண்டு, சுவரின் நடுவில் ஒட்டுவார்.

பிறகு, தமது ஜோல்னா பையிலிருந்து ஒரு விசிலை எடுத்துப் பலமாக ஊதுவார். உடனே, ஒரு கூட்டம் அவரைச் சூழ்ந்து விடும். அக் கூட்டம் கலைவதற்குள் தமது தேர்தல் பிரசங்கத்தை அந்த இடத்திலேயே ஆரம்பித்து விடுவார்!

இந்த வித்தியாசமான மனிதரின் பெயர், 'பூ மேடை' ராமையா பிள்ளை. பெயருக்கு முன்னால் 'பூ மேடை' என்ற சொல் எப்படி வந்தது? ''நான் பிறந்தவுடன் என் ஜாதகத்தைப் பார்த்த போது, இவன் எந்த அரசியல் கட்சியுடனும் சேராமல், 'பூ மேடை தனித்துயர்வான்' என்ற ஜோதிட அலங்காரத்தில் வரும் பாடலை எனக்குப் பலனாகச் சொன்னார்கள் ஜோதிடர்கள். அப்படி ஒட்டிக் கொண்டதுதான் இந்தப் 'பூ மேடை'' என்கிறார்.

தாம் ஒரு நடுநிலைவாதி என்றும் மனித சமூகத்தின் சுபிட்சம்தான் தமது கொள்கை என்றும் கூறும் இவர், முதன் முதலாக, 1971ல் நடைபெற்ற சுசீந்திரம் பஞ்சாயத்துத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டார். பிறகு, 1977, 1980, 1984 – ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற நாகர்கோவில் பாராளுமன்றத் தொகுதித் தேர்தலிலும், 1977, 1984ல் நடைபெற்ற நாகர்கோவில் சட்ட மன்றத் தொகுதித் தேர்தல் மற்றும் 1985ல் நடைபெற்ற திருச்செந்தூர் பாராளுமன்ற இடைத் தேர்தல் என்று எல்லாவற்றிலும் சுயேச்சையாகவே இவர் போட்டியிட்டு டெபாசிட்டை இழந்திருக்கிறார்!

இருந்தாலும் இவர் சோர்ந்து போய் விடாமல் இன்னமும் அடிக்கடி பொதுக் கூட்டங்கள் போட்டுக் கொண்டுதான் இருக்கிறார். கூட்டத்திற்கு மேடை, பந்தல், அலங்காரம் ஒன்றும் கிடையாது. ஒரு மேஜை, ஒரு நாற்காலி, ஒரு டியூப் லைட், ஒரு மைக். இவ்வளவுதான். தலைமை, வரவேற்புரை, நன்றியுரை – என்றெல்லாம் சொல்வார்களே, எல்லாமே இவர் ஒருவரே தான்! எல்லா அரசியல் கட்சித் தலைவர்களையும் சகட்டு மேனிக்குத் தாக்குவார்.

இவருடைய பேச்சைக் கேட்க ஒரு பெரும் கூட்டமே கூடும். இவருடைய கூட்டங்களுக்குப் போலீஸ் பாதுகாப்புக் கூடப் போடுகிறார்கள்.

இவருடைய கூட்டத்தில், யாராவது கைத் தட்டினால்... அவர் மீது எரிந்து விழுவார்! 69 வயதானாலும் இன்னும் கருகருப்பாக இவர் இருப்பதற்கு காரணம், டீ, காப்பி, பீடி, சிகரெட், வெற்றிலை – பாக்கு என்ற எந்தவிதக் கெட்ட பழக்கமும் இல்லையாம். பால் சேர்க்காத வெறும் சுக்குக் காப்பிதான் சாப்பிடுகிறார். அதோடு, செவ்வாய் வெள்ளி – ஆகிய இரண்டு நாட்களிலும் காலை ஆறு மணி முதல் மாலை ஆறு மணி வரை மௌன விரதமும் இருக்கிறார்.

இவ்வளவும் போதாதென்று, 'மெய் முரசு' என்று ஒரு மாதப் பத்திரிகையையும் நடத்திக் கொண்டிருக்கிறார். ''எல்லாவற்றுக்கும் பணத்திற்கு என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்ட போது, ''எனக்கென்று சில ஆதரவாளர்கள் இருக்கிறார்கள். அவர்கள் செய்யும் பொருள் உதவியைக் கொண்டு தான் இவற்றைச் செய்கிறேன்!'' என்றவர், இனிமேல் தாம் தேர்தலில் போட்டியிடப் போவதில்லையென்றார். ஏன்? தேர்தலில் போட்டியிடாமலேயே மத்திய மந்திரி சபையில் இவருக்கு வெகு விரைவில் ஓர் எம்.பி. அந்தஸ்து கிடைக்க இருப்பதாக இவருடைய ஜாதகம் சொல்கிறதென்று அத்தனை நம்பிக்கையோடு கூறுகிறார்!

சந்திப்பும், படமும்:
**குளச்சல் இப்ராஹீம்.**

**வாசகர் யோசனை:**
**செ. வரதராஜன்,**
**பொடுதறவிளை.**



உண்ணாவிரதத்தின் போது சட்டமன்ற உறுப்பினரிடம் உறுதிமொழி வாங்கும் மக்கள்...

# எம்.எல்.ஏ.விடம் உறுதிமொழி வாங்கிய மக்கள்!

**மேற்கண்ட சாலையைச் சீர்செய்யும் பணியினை ஓர் ஆண்டுக்குள் தொடங்கிவிட உறுதி கூறுகிறேன்.**

**— பா. மணிமாறன், எம். எல். ஏ.**

**ந**ன்னிலம் ரிசர்வ் தொகுதியின் சட்டமன்ற உறுப்பினரிடம்தான் இப்படி எழுத்து மூலம் உறுதிமொழி வாங்கியிருக்கிறார்கள் செம்பியநல்லூர் கிராம மக்கள்!

பொறுத்துப் பொறுத்துப் பார்த்து வேறு வழி தோன்றாமல், காவல் துறை பொதுப் பணித்துறை, மாவட்ட ஆட்சியர், முதலமைச்சர் தனிப்பிரிவு, தொகுதி சட்டமன்ற உறுப்பினர் அவ்வளவு பேருக்கும் அறிவிப்புத் தந்து விட்டுச் சுமார் இருநூறு பேர், போன டிசம்பர் பதின்மூன்றாம் நாள் உள்ளூர்ப் பள்ளிக் கட்டடம் அருகே உண்ணா நோன்பு மேற்கொண்டார்கள். பாட்டாளி மக்கள் கட்சியின் மாவட்டத் துணைத் தலைவர் எஸ். கே. சுந்தரம் தொடங்கி வைத்த இந்த உண்ணாவிரதம், கடைசியில் இப்படி ஓர் உறுதிமொழியையாவது வாங்கித் தந்து நம்பிக்கை நாற்றை நடவு செய்திருக்கிறது.

**செ**ம்பியநல்லூர் மற்றும் அதன் சுற்று வட்டார கிராமங்களான இரட்டைக் குடி, புழுகநாதபுரம், மாளிகை, நத்தம் இவற்றிலிருந்தெல்லாம் ஓர் அவசர ஆத்திரத்துக்கு மருத்துவ உதவியோ வேறு ஏதுமோ வேண்டுமானால் ஏழு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பூந்தோட்டம் போயாக வேண்டும். வண்டிச் சக்கரம் சிக்கித் திணறுகிற களிமண் சாலையில் எவ்வளவு வேகமாகப் போனாலும் மூன்று நான்கு மணி நேரப் பயணத்தில்தான் உதவி கிடைக்குமென்றால் — அதுவும் பேறுகாலப் பெண்ணுக்கு மாட்டு வண்டிக் குலுக்கலில் போக வேண்டுமென்றால்....?

மூன்று கிலோ மீட்டரில் ஓர் ஆயா மட்டும் உண்டு. சாதாரண பிரசவங்களுக்கு வேண்டுமானால் அவர் உதவலாம். சிக்கல் ஏற்பட்டு விட்டால் —

ஏற்பட்டிருக்கிறது! இரட்டைக் குடியிலிருந்து ஒரு நிறை மாதப் பிள்ளைத்தாய்ச்சிப் பெண்ணைக் காப்பாற்ற முடியாமல் சமீபத்தில்தான் கண்ணீர் சிந்தியிருக்கிறார்கள். கூட்டி வந்த டாக்ஸி கூட அம்பல் கிராமத்துக்கு மேல் உள்ளே வர முடியாமல் இந்த அவலம் நேர்ந்தது.

இருக்கிற குண்டுகுழிக் களிமண் சாலையும் கரும்புச் சுமை கொண்டு போகும் டிராக்வண்டிகளால் வெகுவாய்ப் படுகாயப்பட்டு நடக்கக் கூட முடியாத அளவுக்குக் கிடக்கிறது. மழை பெய்து விட்டால் அவ்வளவுதான்!

இந்தக் களிமண் பாதைக்குக் கப்பி போட்டுச் செம்மைப்படுத்தித் தர வேண்டும் என்பதுதான் இந்தக் கிராம மக்களின்

குறைந்தபட்சக் கோரிக்கை.

கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகளுக்கு மேலான மௌனப் போராட்டம் இது. முதலில் உள்ளூரில் காகிதப் பற்றாக்குறை வருமளவுக்கு கலெக்டர் அலுவலகத்தில் மனுக் கொடுத்துப் பார்த்தார்கள். இதே சட்டமன்ற உறுப்பினர் அப்போது ஆட்சியாளரிடம் இந்த மக்களை அழைத்துப் போனாராம். ஒன்றும் பயன்தரவில்லை. அடுத்த கட்டம் எண்பத்து நாலு வாக்கில் தேர்தல் வந்த போது 'வோட்டுப் போட மாட்டோம்' என்று புறக்கணிப்பு மிரட்டல் விடுத்த போது, வேட்பாளர் வந்து வாக்குறுதி தரவே, வோட்டுப் போட்டார்கள். எதிலும் காரியம் கைகூடாததால் இப்போது உண்ணாவிரதம்.

**வி**யப்பூட்டும் கிராமம் செம்பியநல்லூர்.

'எங்கள் கிராமத்தில் நாங்கள் ஆடு கோழிகள் வளர்ப்பதே இல்லை. புலால் உணவு உண்பதில்லை. தென்னை மரங்களில் கள் இறக்க அனுமதிப்பதில்லை. படிக்காதவர்கள் என்று யாருமே இல்லை. கையெழுத்துப் போடாமல் ரேகை வைக்கும் பேர்வழிகள் இந்தக் கிராமத்திலேயே இல்லை...' என்று நண்பர் இராமமூர்த்தியும், சௌரிராஜனும், பஞ்சாயத்து உறுப்பினர் ஜீவாவும் சொன்னார்கள்.

இதற்கு யார் காரணம்? 'செம்பியநல்லூர் ஐயா' என்று அனைவராலும் அழைக்கப்படும் செ. கோவிந்தசாமி. சென்ற நூற்றாண்டின் இறுதியில், இந்தக் கிராமத்திற்கு வள்ளலாரையும், கல்வியையும் அறிமுகப்படுத்தியவர் அவர்தான்.

அவருடைய மாணாக்கர் பெரியவர் எ. சிங்கார வேலனார் — இப்போது தொண்ணூற்று மூன்று வயதிலும் கண்பார்வைத் தெளிவோடு நன்னூல், திருவருட்பா என்று தலைமாட்டில் வைத்துக் கொண்டு படித்துக் கொண்டிருக்கிறார். கோவிந்தசாமி ஐயா எப்படி ஓர் இயக்கமாகவே செயல்பட்டார் என்பது பற்றிக் கதைக் கதையாகக் கூறுகிறார்.

இப்படிப்பட்ட செம்பியநல்லூர் மக்களின் 'சாலைக் கனவு' விரைவில் கைகூடுவது ஆரவாரமில்லாத அமைதிப் போருக்குக் கிடைக்க வேண்டிய வெற்றியாகும். இத்தகைய நியாயமான கோரிக்கையுடன் கூடிய அமைதிப் போராட்டங்களை அரசு அலட்சியம் செய்யும் போதுதான் வன்முறையில் மக்களுக்கு கவனம் திரும்புகிறது என்பதை மறக்கக் கூடாது.

— 'கலசை'

50

'யோசனை தெரிவித்த வாசகர்:
புலவர் நா. தண்டபாணி,
அம்பல்.



# சிவகாமியின் சபதம்

நாற்பத்தாறாம் அத்தியாயம்

## புலிகேசியின் காதல்

வறண்ட மலைப் பிரதேசங்களையும் அடர்ந்த வனப் பிரதேசங்களையும் நீர் வற்றி, வெண்மணல் பரந்த நதிகளையும் கிளி கொஞ்சும் மாந்தோப்புக்கள் சூழ்ந்த அழகிய கிராமங்களையும் கடந்து, வஜ்ரபாஹுவும் பரஞ்சோதியும் இடைவிடாத பிரயாணம் செய்து கொண்டு போனார்கள்.

சில சமயம், வஜ்ரபாஹு, வீர ரஸம் செறிந்த பாரத யுத்தக் கதைகளைப் பரஞ்சோதிக்குக் கூறுவான். அர்ச்சுனனுடைய வில் தொழில் திறன்களையும், அபிமன்யுவின் அசகாய சூரத்தனத்தையும், பீமனுடைய கதாயுதம் நிகழ்த்திய விந்தைகளையும் பற்றி, வஜ்ரபாஹு சொல்லும் போதெல்லாம், பரஞ்சோதிக்கு ரோமாஞ்சனம் உண்டாகும். குருக்ஷேத்திரப் போர்க்களத்தில், தானும் பாண்டவர்களின் கட்சியில் நின்று, வீரப் போர் செய்வதாக எண்ணிக் கொள்வான். அவனையறியாமலே அவனுடைய கைகள், வில்லை வளைத்து நாணேற்றும்; பகைவர் மீது வேலை வீசும்; வாளைச் சக்கராகாரமாய்ச் சுழற்றும்.

இன்னும் சில சமயம், வஜ்ரபாஹு, ஆழ்ந்து யோசனை செய்யத் தொடங்கி விடுவான். அப்போது பரஞ்சோதி கேட்கும் கேள்விகளுக்கு, அவன் விடை சொல்ல மாட்டான். மேடு, பள்ளம், காடு, தண்ணீர் என்று பாராமல், குதிரையை நாலு கால் பாய்ச்சலில் விடுவான். அவன் பின்னோடு, பரஞ்சோதி குதிரையைச் செலுத்திக் கொண்டு செல்வதே, பெரும் பிரயத்தனமாயிருக்கும்.

இன்னும் சிலசமயம், வஜ்ரபாஹு, வாதாபி சைனியத்தின் படையெடுப்பைப் பற்றியும் பல்லவ ராஜ்யத்துக்கு வந்திருக்கும் பேரபாயத்தைப் பற்றியும் பேசுவான். அப்போதெல்லாம், அவனுடைய தொனியில், கவலை நிறைந்திருக்கும். அமைதி குடி கொண்ட, அழகிய கிராமங்களின் ஓரமாக அவர்கள் போகும்போது, ''ஆஹா! இந்தக் கிராமங்களுக்கெல்லாம் இன்னும் கொஞ்ச நாளில் என்ன கதி நேரப் போகிறதோ, தெரியவில்லையே?'' என்று சொல்லுவான்.

நீண்ட கிளைகளை நாலாபுறமும் பரப்பிக் கொண்டு, குளிர்ந்த நிழல் தந்து நின்ற விசாலமான ஆலமரங்களையும், பசுமையான தென்னந் தோப்புக்களையும் பார்க்கும் போதெல்லாம், வஜ்ரபாஹு பெருமூச்சு விடுவான். ''மறுபடியும் நாம் இந்தப் பக்கம் வரும் போது, கண் குளிரும் இந்தப் பசுமையைக் காண்போமா?'' என்பான்.

இந்த அதிசயமான கவலைக்குக் காரணம் என்னவென்று, பரஞ்சோதி வற்புறுத்திக் கேட்ட போது, வஜ்ரபாஹு கூறினான்: ''அப்பனே! நீ அந்த வாதாபி சைனியத்தின் பாசறையை முழுவதும் சுற்றிப் பார்க்கவில்லை. நான் பார்த்தேன்! அந்த பிரம்மாண்டமான யானைப் படையையும் நினைத்து, இந்தப் பசுமையான மரத்தோப்புக்களையும் பார்த்தால், எனக்கு கண்ணில் ஜலம் வருகிறது'' என்றான்.

''மனிதர்களுக்காகவும் ஜீவப்பிராணிகளுக்காகவும் இரக்கப்படுகிறவர்களை நான்

**அமரர் கல்கி**

பார்த்திருக்கிறேன். மரங்களுக்காகக் கண்ணீர் விடுகிறவரை இதுவரையில் கண்டதில்லை,'' என்றான் பரஞ்சோதி.

''மரங்களுக்கு நான் இரங்கும் போது, மனிதர்களுக்காகவுந்தான் இரங்குகிறேன், தம்பி! மனிதர்களின் வாழ்க்கை பெரிதும் மரங்களைத்தான் பொறுத்திருக்கிறது. பசுமையான மரங்கள், செழித்து வளர்ந்த பிரதேசங்களிலே மழை அதிகமாகப் பெய்யும். மழை பெய்தால் ஏரிகள் நிரம்பும்; நதியில் பிரவாகம் வரும்; நீர்வளம் செழிக்கும்; ஜனங்களும் சுபிட்சமாய் வாழ்வார்கள். ஒரு பிரதேசத்திலுள்ள மரங்களையெல்லாம் அழித்து விட்டால், அங்கே மழை குன்றும்; கொஞ்ச நாளில் கொடிய பஞ்சம் தோன்றும். ஆனால், காவேரி நதி பாயும் சோழ வள நாட்டில் பிறந்து வளர்ந்த உனக்கு இதெல்லாம் எங்கே தெரியப் போகிறது?'' என்றான் வஜ்ரபாஹு.

''உண்மைதான், ஐயா! பசுமையான மரங்களின் முக்கியத்தை இவ்வளவு தூரம் நான் இதற்கு முன் உணர்ந்தது கிடையாது. ஆனால் நீங்கள் சொல்வதற்கும் வாதாபி சைனியத்துக்கும் என்ன சம்பந்தம்?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''ஒரு யானை ஒரு நாளில் எவ்வளவு ஆகாரம் சாப்பிடும், தெரியுமா?''

''தெரியாது, ஐயா!''

''ஆறு மரக்கால் அரிசி, ஒன்பது தார் வாழைப்பழம், இருபத்தைந்து தேங்காய், ஓர் ஆலமரத்தில் பாதி — இவ்வளவையும் சாப்பிட்ட பிறகு யானையின் பசி அடங்காது!''

''அம்மம்மா!'' என்றான் பரஞ்சோதி.

''இவ்வளவுக்கும் மேலே, யானைப் பாகனுக்கும் அதன் வயிற்றில் இடம் இருக்கும்! ஆனால், யானைகள், சைவ விரதங் கொண்டவை யாகையால், யானைப் பாகனைச் சாப்பிடுவதில்லை!''

பரஞ்சோதி சிரித்து விட்டு, ''வாதாபிப் படையில் அப்படி எத்தனை யானைகள் இருக்கின்றன?'' என்று கேட்டான்.

''பதினையாயிரம் யானைகள், அப்பனே! பதினையாயிரம் யானைகள்! இவ்வளவு யானைகளும் ஒரு தடவை காஞ்சிநகர் வரையில் வந்துவிட்டுத் திரும்பினால் போதும்! அவை வந்து போன வழியெல்லாம் பசுமையென்பதே இல்லாமல், பாலைவனமாய்ப் போய் விடும்.''

''காஞ்சி நகரம் வரையில், வாதாபி சைனியம் வந்துவிடும் என்று, அடிக்கடி சொல்கிறீர்களே, அது ஏன்?''

''பதினையாயிரம் யானைகளையும் ஐந்து லட்சம் காலாட்படைகளையும் யாரால் தடுத்து நிறுத்த முடியும், தம்பி? கடவுளே பார்த்து நிறுத்தினால்தான் நிறுத்தியது!''

''காஞ்சிக்கோட்டையை ஏன் அவ்வளவு பத்திரப்படுத்தினார்கள் என்பது எனக்கு இப்போதுதான் தெரிகிறது,'' என்று பரஞ்சோதி சொன்னதைக் கேட்டு, வஜ்ரபாஹு ஏளனக் குரலில் சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறீர்கள், ஐயா?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''காஞ்சிக் கோட்டையை, ரொம்பவும் பத்திரப்படுத்தி இருப்பதாகத்தான், ஒரு காலத்தில் நான் கூட நினைத்தேன். ஆனால் அந்த எண்ணம் எவ்வளவு தவறு என்று, இப்போது தெரிகிறது.''

''ஏன்? கோட்டைக்குப் பத்திரம் போதாதா?'' என்று பர்ஞ்சோதி கேட்டான். இரகசியச் சுரங்க வழியாகத் தன்னை நாகநந்தி வெளியேற்றியது அவன் ஞாபகத்துக்கு



வந்தது.

''வாதாபி யானைகள் சாராயத்தைக் குடித்துவிட்டு வந்து காஞ்சிக் கோட்டையின் கதவுகளை மோதும்போது கோட்டைக் கதவுகள் எப்படி நொறுங்கிச் சின்னாபின்னமாகப் போகின்றன என்பதை நினைத்தால் சிரிப்பு வருகிறது'' என்றான் வஜ்ரபாஹு.

இதென்ன விந்தை? யானைகள் சாராயம் குடிக்குமா என்ன?''

''யானைகளை மாமிசபக்ஷிணிகளாகச் செய்ய முடியவில்லை. ஆனால் மதுபானம் செய்யப் பழக்கியிருக்கிறார்கள். வாதாபி சைனியத்தில் ஆயிரக்கணக்கான வண்டிகளில் பெரிய பெரிய சால்களில் சாராயம் கொண்டு வருகிறார்கள். யானைகளைச் சாராயம் குடிக்கச் செய்து கோட்டைக்



கதவுகளை மூட்டச்செய்யப் போகிறார் களாம்!''

''இது என்ன அநாகரிக யுத்தம்?'' என்றான் பரஞ்சோதி.

''யுத்தமே அநாகரிகந்தான், தம்பி!'' என்றான் வஜ்ரபாஹு.

''எல்லா யுத்தத்தையும் அநாகரிக யுத்தம் என்று சொல்ல முடியுமா? நாட்டைக் காப்பதற்காக மகேந்திர சக்கரவர்த்தி நடத்தும் யுத்தம் அநாகரிக யுத்தமா?'' என்றான் பரஞ்சோதி.

''மகேந்திர சக்கரவர்த்தியின் பெயரை மட்டும் என் காது கேட்கச் சொல்லாதே! தேசப் பாதுகாப்பை அசட்டை செய்துவிட்டு ஆடலிலும் பாடலிலும் அவர் காலங் கழித்ததை நினைத்தால் எனக்குக் கோபம் கோபமாய் வருகிறது!''

பரஞ்சோதி வஜ்ரபாஹுவின் முகத்தைச் சற்றுக் கவனமாய்ப் பார்த்துவிட்டு, ''அப்படியானால், காஞ்சிக் கோட்டையைப் பாதுகாக்கவே முடியாது என்று நினைக்கிறீர்களா?'' என்றான்.

''வாதாபி சைனியம் நேரே காஞ்சிக்கு வந்து சேர்ந்தால் காஞ்சிக் கோட்டையைக் கடவுளால் கூடக் காப்பாற்ற முடியாது!''

''அப்படி வந்து சேராதல்லவா?''

''அதன் பொருட்டுத்தான் ஓட முயன்றவன் முதுகில் வேலை எறிந்து கொன்றேன். நாகநந்தி கொடுத்ததாகப் புலிகேசியிடம் ஓர் ஓலை கொடுத்திருக்கிறேன். அதைப் பற்றிப் புலிகேசிக்குச் சந்தேகம் தோன்றாதிருந்தால் காஞ்சியைத் தப்புவிக்கலாம்.''

''நீங்கள் கொடுத்த ஓலையில் என்ன எழுதியிருந்தது, ஐயா?''

''தம்பி! அந்த விஷயத்தைப்பற்றி நீ கேளாமலிருந்தால் நான் பொய் சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படாது!'' என்று முன்னொரு தரம் பரஞ்சோதி கூறிய வார்த்தைகளை வஜ்ரபாஹு இப்போது திருப்பிக் கூறினான்.

பரஞ்சோதி சற்று நேரம் சும்மா இருந்து விட்டு, ''ஐயா! நீங்கள் கொடுத்த ஓலையின் பலனாகச் சளுக்க சைனியம் காஞ்சிக்கு வராமல் வாதாபிக்கே திரும்பிப் போய் விடுமா?'' என்று கேட்டான்.

''அப்பனே! காஞ்சி என்ற பெயரைக் கேட்டதும் புலிகேசியின் கண்களில் தோன்றிய ஆசை வெறியை நீ பார்த்திருந்தாயானால் இவ்விதம் கேட்டிருக்க மாட்டாய். என்னை அச்சுத விக்கிராந்தனுடைய சந்ததியில்வந்தவனாகநினைத்துக்கொண்ட புலிகேசி, தன்னுடைய மனத்தை நன்றாகத் திறந்து காட்டினான்.....''

''அது யார் அச்சுத விக்கிராந்தன்?'' என்று பரஞ்சோதி குறுக்கிட்டுக் கேட்டான். எந்த விஷயத்தையும் ஐயந்திரிபறத் தெரிந்து கொள்வதில் அவனுக்கு அடங்காத ஆசை ஏற்பட்டிருந்தது.

''பாண்டிய நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் மத்தியில் இருநூறு வருஷங்களுக்கு முன் தனி அரசு செலுத்திய அச்சுதக் களப்பாளனைப் பற்றி நீ கேட்டதில்லையா? அந்த அச்சுதக் களப்பாளனின் வம்சம் நான் என்றதும் புலிகேசி நம்பிவிட்டான். 'நீ காஞ்சி நகர் பார்த்திருக்கிறாயா?' என்று

## அருள்வாக்கு

**இது சின்ன பல்பு. அது பெரிய பல்பு. அது நீல விளக்கு. இது பச்சை விளக்கு. விளக்கில் அநேக உருவங்கள் இருக்கின்றன. இருந்தாலும், அவைஎல்லாவற்றுக்குள்ளும் இருக்கும் சக்தி மின் சார சக்தி ஒன்றுதான். எங்கும் வியாபித்திருக்கிற மின் சக்திதான் இங்கே இந்த விளக்குக்குள் இருந்து பிரகாசிக்கச் செய்கிறது. Fan (விசிறி)க்குள் இருந்து சுற்ற வைக்கிறது. இந்த எல்லாக் காரியங்களுக்கும் மூலமான சக்தி ஒன்று. அது அகண்டமானது. அதுவே ஒயர் (கம்பி)க்குள் வருகிற போது கண்டமாகிறது. இயற்கையில் பளீர் பளீர் என்று மின்னும் போது, ஜலம் அருவியாகக் கொட்டும் போது, அங்கெல்லாம் இதுதானே வெளிப்பட வந்து விடுகிறது. இந்த மாதிரி உனக்குள்ளேயே இருக்கிற பரம ஸத்யமான தத்வம் உனக்கு Flash ஆகும்படியாக (பளிச்சிடும்படியாக) பண்ணிக் கொள். கர்மானுஷ்டானத்தில் ஆரம்பித்து, யக்ஞம், தேவதா உபாஸனை எல்லாம் பண்ண வைத்து, மஹா வாக்யத் தியானத்தில் முடிகிற வேத வேதாந்த சாதனங்களெல்லாம் இதற்குத்தான்.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**



கேட்டான். 'பார்த்திருக்கிறேன்' என்றேன். காஞ்சிநகர்க் காட்சிகளை விவரமாக வர்ணிக்கும்படி சொன்னான். நான் அவ் விதமே காஞ்சியை வர்ணித்தபோது, புலி கேசியின் முகத்தில் தோன்றிய பரபரப்பைப் பார்க்க வேணுமே? எலியைப் பார்த்த பூனையின் கண்களில் தோன்றும் ஆசை வெறி புலிகேசியின் கண்களிலும் அப்போது தோன்றிற்று. இராவணன் சீதை யைப் பார்த்து என்ன சொன்னான் தெரி யுமா தம்பி! 'என்னிடம் நீ ஆசை கொள் கிறாயா? அல்லது உன்னைக்காலைப் போஜனத்துக்குப் பலகாரமாகச் செய்து சாப்பிட்டு விடட்டுமா?' என்றானாம். அது போல புலிகேசி காஞ்சி நகரைக் கட்டி ஆள ஆசைப்பட்டாலும் படுவான்; அல்லது அதை அக்கினிக்கு இரையாக்க விரும்பினா லும் விரும்புவான். புலிகேசியின் காதல் விபத்திலிருந்து காஞ்சிமா தேவியைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்'' என்று வஜ்ரபாஹு கூறிவிட்டு, நெடிய மௌனத் தில் ஆழ்ந்தான்.

நாற்பத்தேழாம் அத்தியாயம்

## பிரயாண முடிவு

சூரியாஸ்தமன சமயத்தில் ஒரு மலைப்பாதையின் முடுக்குத் திரும்பியதும் பல்லவ சைனியம் தண்டு இறங்கியிருக்கும் பாசறை தென்பட்டது. பல்லவ சைனியத்தைப் பார்த்தவுடனே தான் வஜ்ரபாஹுவின் கவலைக்கு எவ் வளவு தூரம் காரணம் உண்டு என்பதைப் பரஞ்சோதி உணர்ந்தான்.

வாதாபி சைனியத்துக்கும் பல்லவ சைனி யத்துக்கும் அவ்வளவு மலைக்கும் மடுவுக்கு மான தாரதம்மியம் இருந்தது.

''தம்பி? பார்த்தாயா?'' என்றான் வஜ்ர பாஹு.

''பார்த்தேன், ஐயா!''

''இன்னமும் நீ நம்புகிறாயா, பல்லவ சைனியம் ஜயிக்கும் என்று?''

''கட்டாயம் ஜயிக்கும், ஐயா! சந்தேகமே இல்லை!'' என்று பரஞ்சோதி அழுத்தந் திருத்தமாகச் சொன்னான்.

''அவ்வளவு நிச்சயமாகச் சொல்கி றாயே, எதனால் சொல்கிறாய்?''

''பல்லவ சைனியத்தின் பட்சத்தில் தர்ம பலம் இருக்கிறது. அதோடு கூட, மகேந்திர சக்கரவர்த்தியும் இருக்கிறார்!''

''ஏது ஏது, மகேந்திர சக்கரவர்த்தியிடம் உனக்கு அபார நம்பிக்கை இருக்கிறதே?'' என்றான் வஜ்ரபாஹு.

''ஆம், ஐயா!''

''பல்லவ சக்கரவர்த்தியை நீ பார்த்திருக் கிறாயா, தம்பி?''

''முன்னம் இரண்டு தடவை பார்த்திருக் கிறேன். ஆயனச் சிற்பி வீட்டில் புத்த விக் கிரகத்துக்குப் பின்னால் நான் ஒளிந்திருந்த போது ஒரு தடவை பார்த்தேன். இன் னொரு தடவை காஞ்சியில் நடு ராத்திரியில் மாறு வேடத்தில் பார்த்தேன். அப்போது சக்கரவர்த்தி கிட்டத்தட்டத் தங்களைப் போலத்தான் இருந்தார்! தங்களைப் போலவே பெரிய மீசையும் வைத்திருந்தார்.''

''ஆமாம்! நான் கூடக் கேள்விப்பட்டிருக் கிறேன்; மகேந்திர சக்கரவர்த்தி சிலசமயம் மாறுவேடம் பூண்டு ஊர்சுற்றுவது உண்டு என்று. சக்கரவர்த்தியை நான் என்றும், என்னைச் சக்கரவர்த்தி என்றுங்கூடச் சிலர் சந்தேகப்பட்டிருக்கிறார்கள்.''

''எனக்கு அம்மாதிரியெல்லாம் சந்தேகம் கிடையாது, ஐயா!''

''அது போகட்டும். வாதாபி சைனியம், பல்லவ சைனியம் இரண்டையும் நீ பார்த் திருக்கிறாய். தம்பி! இன்னமும் பல்லவ சைனியத்தில் சேருவதற்கு இஷ்டப்படு கிறாயா?''

''இஷ்டப்படுவது மட்டுமல்ல; பல்லவ சைனியத்திலே சேரத் துடித்துக்கொண் டிருக்கிறேன். இங்கே நாம் பேசிக்கொண்டு நிற்கும் நேரமெல்லாம் வீண் போவதாகவே நினைக்கிறேன்.''

''அப்படியானால், எனக்கு விடை கொடு!''

''என்ன? என்னை இங்கே விட்டுவிட்டா போகிறீர்கள்?''

''ஆமாம்; நான் முதலில் போய்ப் பல்லவ சக்கரவர்த்தியைப் பார்த்து உன்னைப்பற்றிச் சொல்கிறேன். அவர் இஷ்டப்பட்டால் உன்னை அழைத்து வரச் செய்வார். அதுவரையில் நீ பாசறைக்கு வெளியிலே தான் காத்திருக்க வேண்டும்.''

''சக்கரவர்த்தி பாசறையில் இருக் கிறாரா? காஞ்சியிலிருந்து கிளம்பியவரைப் பற்றி அப்புறம் செய்தியே இல்லை என்றீர் களே!''

''இதற்குள்ளே ஒருகால் வந்திருக்கலா மல்லவா?''

''ஐயா! சக்கரவர்த்தியை நான் ஒரு தடவை நேரில் பார்க்க விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்!'' என்று பரஞ்சோதி ஆர்வத்துடன் சொன் னான்.

''எதற்காகச் சக்கரவர்த்தியைப் பார்ப்

## க்ளியரெஸில் கொண்டு தினமும் ஹோம்வொர்க் செய்தால் நண்பர்களிடையேயும் ஃபர்ஸ்ட் க்ளாஸ் மதிப்பெண் பெறுவது மிகவும் சுலபம்.



**காரணம் க்ளியரெஸில் சருமம் ஏனில் அதிகத் தெளிவான சருமம்.**

காலேஜில் பிரபலமாக வேண்டுமென்றால் பின்னணியில் இருந்து பிரயோசனம் இல்லை. நாலு பேருக்கிடையே தனித்து விளங்கிட உங்களுக்குத் தேவை அதிகத்தெளிவான உருவம் அதாவது க்ளியரெஸில் சருமம்.

க்ளியரெஸில் பருக்களில் மூன்று வழிகளில் ஆற்றலுடன் செயல்புரிகிறது.

ஒன்று — பருவுக்குள் ஊடுருவிச் செல்கிறது. இரண்டு — கூடுதல் எண்ணெய்ப் பசையை நீக்குகிறது. மூன்று — பருவை காயவைத்துப்





போக்குகிறது.

பருக்களுக்கு சிகிச்சை அளிப்பதில் க்ளியரெஸில்தான் உலகிலேயே முதன்மையானது என்பது இதனால் தெள்ளத்தெளிவாகிறது.

க்ளியரெஸில் உபயோகியுங்கள் நண்பர் குழாம் அமைத்துக் கொள்ளுங்கள்.




**பருக்களுக்கு சிகிச்சை அளிப்பதில் உலகிலேயே முதன்மையானது.**

பதற்கு அவ்வளவு ஆவலுடன் இருக்கிறாய்?" என்றான் வஜ்ரபாஹு.

"காஞ்சிக் கோட்டையைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்புவிக்கும்படி கேட்டுக் கொள்வதற்குத்தான்!"

"ஓகோ! மதயானையின் மீது வேல் எறிந்த வீரன் அல்லவா நீ? சிவகாமி சுந்தரியைக் காப்பாற்றியது போல் காஞ்சி சுந்தரியையும் காப்பாற்ற விரும்புகிறாய் போலிருக்கிறது! உன்னைப் போன்ற மகா வீரனை, தாளம் போட்டுக் கொண்டு பாசுரம் பாடுவதற்கும் கல்லுளியை வைத்துக் கொண்டு கல்லைச் செதுக்குவதற்கும் உன் மாமா அனுப்பி வைத்தாரே! அது எவ்வளவு பெருந் தவறு?"

"சிற்பக் கலை தெய்வீகக் கலை, ஐயா!"

"போதும், போதும்! அப்படியெல்லாம் சொல்லித்தான் மகேந்திர சக்கரவர்த்தி பல்லவ சாம்ராஜ்யத்தை இந்தக் கதிக்குக் கொண்டு வந்து விட்டார். சக்கரவர்த்தியிடம் நானும் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளப் போகிறேன். 'மலையைக் குடைவது, பாறையைச் செதுக்குவது முதலிய காரியங்களை எல்லாம் நிறுத்துங்கள். பல்லவ ராஜ்யத்திலுள்ள அவ்வளவு சிற்பிகளையும் ஏவி ஒவ்வொரு ஊரிலும் ஒரு பாரத மண்டபம் கட்டச் சொல்லுங்கள். அந்த மண்டபங்களில் ஒவ்வொரு நாளும் ஜனங்கள் கூடிக்கேட்கும்படியாக மகா பாரதம் வாசிக்க ஏற்பாடு செய்யுங்கள்' என்று கேட்டுக் கொள்ளப் போகிறேன்."

"இதெல்லாம் எதற்காக?" என்று பரஞ்சோதி கேட்டான்.

"இந்த யுத்தத்தை மகேந்திர சக்கரவர்த்தியாலும் பல்லவ வீரர்களாலும் மட்டும் ஜயித்து விடமுடியாது. பல்லவ நாட்டிலுள்ள மக்கள் எல்லாரும் வீரமும் பௌருஷமும் அடைய வேண்டும். உயிரைத் திரணமாக மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்."

வஜ்ரபாஹு பரஞ்சோதியைப் பிரிந்து செல்வதற்கு முன்னால் அவனை அன்புடன் தழுவிக் கொண்டு, "தம்பி! எனக்கு ஒரு மகன் இருக்கிறான். அவனுக்கும் உன்னுடைய வயதுதான். நீங்கள் இருவரும் சேர்ந்தீர்களானால் எவ்வளவோ அரும் பெரும் காரியங்கள் செய்யலாம்!" என்றான்.

பரஞ்சோதி, நாத் தழுதழுக்க, "ஐயா! சிறு பிராயத்தில் நான் என் தந்தையை இழந்தேன்! என்னையும் உங்கள் புதல்வனாகவே ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்று கூறினான்.

வீரன் வஜ்ரபாஹு பாசறைக்குள் புகுந்து சென்ற பிறகு பரஞ்சோதிக்கு ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோன்றியது. சக்கரவர்த்தியிடமிருந்து தன்னை அழைத்து வரும்படி எப்போது ஆக்ஞை வருமென்று அவன் ஆவலுடன் காத்திருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பல்லவ சைனியத்தின் பாசறையில் ஒரு பெரிய கலகலப்பு ஏற்பட்டது. திடீரென்று பல ஆயிரம் வீரர்களின் குரல்கள் எழுப்பிய ஜயகோஷம் வானவெளியையெல்லாம் நிரப்பி மலை அடிவாரம்வரை சென்று எதிரொலி செய்தது. சங்கங்களும் முரசங்களும் பேரிகைகளும் சேர்ந்து முழங்கிய பேரொலி வானமுகடு வரையில் சென்று முட்டித் திரும்பியது.

பாசறையின் வாசலில் நின்று காவல் புரிந்த வீரர்களைப் பரஞ்சோதி தயக்கத்துடன் நெருங்கி, பாசறைக்குள்ளே மேற்கூறிய கோலாகலத்தின் காரணம் என்னவென்று கேட்டான்.

அதற்கு, "மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி பாசறைக்கு வந்து விட்டார்!" என்று குதூகலமான மறுமொழி கிடைத்தது.

(முதல் பாகம் முற்றும்)

## மாதம் ஒரு தொகுதி

### சிவகங்கைத் தொகுதி வாசகர்களே...!

இந்த மாதம் உங்கள் சிவகங்கைத் தொகுதியைத்தான் ஆய்வு செய்ய வருகிறோம். எனவே, உங்கள் தொகுதி எம்.எல்.ஏ. பா. மனோகரன் செய்த சாதனைகளையும், செய்ய மறந்த பணிகளையும் எங்களுக்கு உடனடியாக எழுதியனுப்புங்கள்.



முடிவு தேதி: 19.1.91

— ஆசிரியர்.

"ஓரே சினிமாவைத் தினசரி மூன்று காட்சிகள், நான்கு காட்சிகள் என்று திருப்பித் திருப்பி ஓட்டிக் கொண்டிருக்கும் சினிமா ஆபரேட்டர்களுக்குப் போரடிக்காதா?'' — நெய்வேலியைச் சேர்ந்த கல்கி வாசகர் சி. அலெக்ஸாண்டரின் இந்தக் கேள்வியைச் சென்னையிலுள்ள உதயம் குரூப் தியேட்டர்களின் தலைமை ஆபரேட்டரான சீனிவாசனிடம் கேட்டோம்.

''இந்தக் கேள்விக்கு நான் வாய் மூலமாகப் பதில் சொல்லிப் புரிந்து கொள்வதை விட ஆபரேட்டர் கேபினில் நடக்கும் நிகழ்ச்சிகளை நீங்களே பார்த்துத் தெரிந்து கொள்வதுதான் சரியானதாக இருக்கும்!''



# சினிமா ஆபரேட்டர்களுக்குப் போரடிக்காதா?



50

என்று நம்மை அழைத்துச் சென்றார்.

கேபினுக்குள் இரண்டு பெரிய புரஜக்டர்கள். ஒன்றில் படம் ஓடிக் கொண்டிருந்தது. என்ன காட்சி என்று கேபினுக்குள்ளிருந்து திரையை எட்டிப் பார்த்தோம். பிறகு மீண்டும் கேபினுக்குள் பார்த்தோம். அதற்குள் முதல் புரஜக்டர் நின்று போய் இரண்டாவது புரஜக்டர் ஓடிக் கொண்டிருந்தது!

''முதல் புரஜக்டரிலுள்ள பிலிம் முடியப் போகிறதென்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது? திரையில் கொஞ்சம் கூட இடைவெளி ஏற்படாமல் எப்படி அடுத்த புரஜக்டரை இயக்கினீர்கள்?'' நாம் ஆச்சரியப்பட்டுக் கேட்டோம்.

ஓடி முடிந்த ரீல் ஒன்றை எடுத்துக் காட்டினார் சீனிவாசன். "பார்த்தீர்களா... பிலிம் முடியும் தருவாய்க்கு முன்பே சில பிரேம்களின் ஓரத்தில் சிறு சிறு வட்டக் குறிகள்... இந்தக் குறிகள் பிலிம் முடிவதற்குச் சில அடிகள் முன்பே விட்டு விட்டு வரும். இவை திரையின் ஓரத்தில் மட்டுமே தெரியும் என்பதால் படம் பார்க்கும் ரசிகர்கள் படம் பார்க்கும் ஆர்வத்தில் இதைக் கவனிக்க மாட்டார்கள். ஆனால், நாங்கள் கவனிப்போம். இந்தக் குறிகள் தென்பட்டதும் உடனடியாக அடுத்த புரஜக்டரை இயக்கத் தயாராகி விடுவோம். சுமார் இருபது நிமிடங்களுக்கு ஒருமுறை இப்படி நாங்கள் புரஜக்டர்களை மாற்றி மாற்றி இயக்கிக் கொண்டிருப்போம். நாங்கள் இதை மிகவும் கவனமாகவும் சுறுசுறுப்பாகவும் செய்வதால் திரையில் இடைவெளியின்றித் தொடர்ந்து படம் ஓடிக் கொண்டேயிருக்கும்.

"சமயத்தில் பிரிண்ட்களின் பற்றாக்குறை காரணமாகப் பக்கத்துத் தியேட்டரில் முதலில் படத்தை ஆரம்பிக்கச் சொல்லி, அங்கு ஒவ்வொரு ரீலாக ஓடி முடிந்ததும் இங்கே கொண்டு வந்து போட்டுப் படத்தை ஓட்ட வேண்டியிருக்கும். அம்மாதிரி சமயங்களில் சரியான நேரத்திற்குப் பக்கத்துத் தியேட்டரில் ஓடி முடிந்து ரீல்கள் வந்து சேர வேண்டுமே என்கிற டென்ஷனும் சேர்ந்து கொள்ளும்!

''இவற்றோடு ஃபோகஸ், ஒலி — ஒளி அமைப்புகளையும் கவனித்துக் கொள்ள வேண்டும். இவற்றில் சிறிது பிசகி விட்டாலும் படம் பார்க்கும் ரசிகர்கள் உடனே விசிலடித்துக் கலாட்டா செய்து விடுவார்கள். பழைய படமானால் எதிர்பாராதவிதமாக பிலிம் அறுந்து போய் விடக் கூடும். அப்போது துரிதமாகச் செயல்பட்டு படத்தைத் தொடர்ந்து காட்ட வேண்டும். ஆக மொத்தம், திரையில் என்ன படம் ஓடுகிறது என்பதை விட, அந்தப் படம் எப்படி ஓடுகிறது என்பதிலேயே எங்களின் முழு கவனமும் இருக்கும் என்பதால், போர் என்ற பேச்சுக்கே இடமில்லை!'' என்றார் இதுவரை ஆயிரம் படங்களை ஓட்டிய சீனிவாசன். சினிமா ஆபரேட்டராவதற்குப் பயிற்சியும் பரீட்சையும் உண்டு என்று தெரிவித்த அவர், அந்தப் பயிற்சியில் தீ விபத்தைச் சமாளிப்பது எப்படி என்பது கூட கற்றுத் தரப்படும் என்றார்.

சினிமா ஆபரேட்டர் தொழில் இத்தனை முக்கியமானது என்பதால், ஆபரேட்டர்கள் கவனமாகச் செயல்பட வேண்டும் என்பதற்காகத் தயாரிப்பாளர்களும் விநியோகஸ்தர்களும் படம் அனுப்பும் ரீல் பெட்டிகளில் 'டிப்ஸ்' போட்டும் அனுப்புவார்களாம்!

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **ரமணன்**

# சரஸ்வதி கடாட்சம்

ஐயா,

நான் ஓர் ஏழை; சாதாரண குடும்பஸ்தன். தனியார் நிறுவனமொன்றில் வேலை பார்த்து வந்த எனக்குத் திருமணமாகிப் பத்து வருடங்கள் சென்று விட்டன. எட்டு வயதில் ஒரு மகளும் ஆறு வயதில் ஒரு மகனும். கடன் வாங்கிக் கடனை அடைக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் வாழ்ந்து வரும் எனக்குச் சிறுநீரகம் பழுதடைந்து விட்டதாம். கடந்த ஒரு வருஷமாக நான் பட்ட துன்பங்கள் சொல்லுக்கு விளங்காதவை. இன்று என்னை மிகவும் வாட்டுவது நோயின் கொடுமையை விட என் குழந்தைகளுக்கு இரு வேளையாவது வயிறார உணவு கொடுக்க முடியவில்லையே என்கிற வேதனைதான். பள்ளியில் போடும் சத்துணவுதான் இன்று அவர்களின் உயிர் காக்கிறது.

நான் வாழ்நாள் முழுவதும் எவ்வளவு சம்பாதிக்க முடியுமோ அவ்வளவு பணத்தை இன்று என்னைக் குணப்படுத்துவதற்காக டாக்டர்கள் கேட்கிறார்கள். இன்று எனக்கு உதவ ஒருவருமில்லை என்பதுதான் முற்றிலும் உண்மை. இந்நிலையில் நான் என்ன செய்வது? யாரிடம் உதவி கேட்பது? தாங்கள் தயவு செய்து தங்கள் இதழில் என்னைப் பற்றிக் குறிப்பிட்டு எனக்கு உதவும்படி எழுதினால் மட்டுமே, எனக்கு நம்பிக்கை துளிர்க்கும். எனவே தாங்கள் தயவு கூர்ந்து என் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சைக்காக என் குடும்பத்தின் நலனுக்காக வாசகர்களை உதவும்படி எழுத வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மிக்க நன்றி.

இப்படிக்கு,

இராமநாதன்.

பிரபலமான அப்பத்திரிகையின் ஆசிரியர் சந்தானம் (கே. எஸ்.) கடிதத்தைப் படித்து விட்டு, கண்ணாடியைக் கழற்றிக் கீழே வைத்தார். லேசான புன்னகையுடன் அக் கடிதத்தைத் திருப்பி, எழுதியவரின் விலாசத்தை நோட்டம் விட்டார். முன் வழுக்கை, நெற்றியில் லேசான குங்குமத் தீற்றல், கனத்த பிரேம் போட்ட கண்ணாடி, கருப்பும் வெளுப்பும் கலந்த ஒரு வண்ணத்தில் கட்டையாக நறுக்கி விடப்பட்ட மீசை.

அக் கடிதத்தைத் தனிப்பட எடுத்து ஒரு பக்கமாகப் பேப்பர் வெயிட்டின் கீழ் வைத்தார். அப்போது ஆசிரியரின் உதவியாளர் ஒருவர் உள்ளே வந்து போர்ட் மீட்டிங்குக்கு நேரமாகி விட்டதைக் குனிந்து சொன்னார். அதன் பிறகு பத்திரிகை விஷயம், பிரச்னை என்கிற கடலில் மூழ்கி அதில் இந்தக் கடிதத்தைப் பற்றி மறந்தே போனார்.

மறுநாள் கே. எஸ். ஸுக்கு பிரதமரின் அலுவலகத்தின் செய்திப் பிரிவிலிருந்து ஒரு தகவல் வந்திருந்தது. வருகிற பதினைந்தாம் தேதி பிரதமர் வெளிநாடுகள் சுற்றுப் பயணம் செல்லவிருப்பதால் உடன் செல்லும் பத்திரிகையாளர் குழுவில் அவர் சேர்க்கப்பட்டிருப்பதாகச் செய்தி. பயணத்துக்கான ஏற்பாடுகளில் இறங்கினார் கே. எஸ். பயணம் முடிந்து திரும்பி வந்த பிறகு நீண்டதொரு கட்டுரைத் தொடர் எழுதினார். பிரதமர் லண்டனிலிருந்து பாரிஸ் செல்லும் போது அத்தனை ஆரவாரமான வரவேற்புகளுக்கிடையிலும் தம்மை மட்டும் அழைத்து, 'எல்லாம் வசதியாக இருக்கிறதா?' என்று விசாரித்ததை உணர்ச்சி பொங்க விவரித்திருந்தார். அத்துடன் பிரதமருக்கு தம் இதழின் மேல் உள்ள அக்கறையை எண்ணி வியந்து போனதாகவும் எழுதியிருந்தார்.

சுற்றுப்பயணம், எழுத்து, இவற்றுக்கு நடுவே கிட்டத்தட்ட ஒரு மாதம் வாசகர் கடிதம் பற்றியே அவர் மறந்து போனார். அவர் வேலை நேரம் சகஜ நிலைக்குத் திரும்பி வந்தவுடன்தான் மேஜையை ஒழிக்க, அப்போது தாம் தனியாக எடுத்து வைத்திருந்த கடிதம் மீண்டும் கவனத்தைக் கவர்ந்தது.

சிறிது நேரம் மௌனமாக யோசித்தார் கே. எஸ். பின் பஸ்ஸரை அழுத்தி ஜமீலை வரச் சொன்னார். ஒல்லியான நெடிய உருவம், பாரபட்சமாய் இரு பக்கமும் வாரி விடப்பட்ட அடர்த்தியான கோரை முடிகள், அடர்த்தியாகச் சிலிர்த்து நிற்கும் அனில் கபூர் மீசை, முழுக்கைச் சட்டையுடன் எப்போதும் காட்சி தரும் ஜமீல், வர ஐந்து நிமிடங்கள் ஆயிற்று.

''என்னய்யா ஜமீல், இந்த லெட்டர்

ப. ஜெய்சங்கர்



பார்த்தியா? என்ன செய்யலாம் சொல்லு?''

''ஆமா ஸார். நானும் பார்த்தேன். லெட்டர்ல அவன் உணர்ச்சிகளை அவன் நினைக்கிற மாதிரி அப்படியே காட்ட முடியாட்டாலும், சொல்றது உண்மை தான்னு எனக்குத் தோணுது. பத்திரிகையில போடலாமா, வேணாமான்னு முடிவு பண்றதுக்கு முன்னே ஒரு ரிப்போர்ட்டரை அனுப்பிப் பார்க்கலாம்.''

சந்தானம் சிரித்தபடி கேட்டார். ''நன்கொடைகள் வரும்னு நீ நெனக்கறியா? பணம் வந்துட்டாப் பரவாயில்லே. ஆனா ஒரு கௌரவமான தொகை சேராம போனா என்ன ஆகும்னு நினைச்சுப் பாரு. இவனுங்க வேண்டுகோளுக்கு அவங்க வாசகர்கிட்டே அவ்வளவுதான் மதிப்புன்னு மத்த பத்திரிகைக்காரனுங்க கேள்வி பதில்ல கிண்டல் பண்ணுவானுங்களே!''

சந்தானத்தோடு ஜமீலுக்கு ஐந்து வருட அனுபவம். சந்தானம் என்ன முடிவெடுத்திருக்கிறார் என்பதை ஊகித்து விட்டான். பாஸிடிவ்தான். ஆனால் இப்படி அவர் கேட்பதெல்லாம் பாவ்லா.

''ஆல்ரைட் சார். யாரை அனுப்பலாம் சொல்லுங்க?''

''பிடிச்சிட்டியா? நீ தான்யா இப்ப என் சீட்டுக்கு ஆபத்து. கண்டிப்பா உன்னை இங்கே விட்டு வைக்கக் கூடாது.''

ஜமீல் சிரித்தான்.

''நாளைக்கு நீ தான் போக வேண்டும். அந்த... என்ன வில்லேஜ் அது... ஆங்... மருதாடு. போய் விசாரிச்சுட்டு வந்துடேன்.''

''ஓ.கே. சார், நாளைக்குப் போறேன்.''

''நீங்கதான் ராமனாதனா?'' என்றான் ஜமீல். ''நாங்க... பத்திரிக்கைக் காரங்க.'' புகைப்படக்காரரை அறிமுகம் செய்தான்.

''உள்ளே வாங்க. உக்காருங்க...'' இராமனாதன் பரபரப்பானான். ''சரசு அந்தப் பாயை எடுத்தா...'' என்றான். ''இதுதாங்க



''நாம காதலிக்க இன்றோட நூறு நாளாவுதுங்க!''

''ஆச்சரியமாக இருக்கே!''

''ஏன்?''

''நான் இதுவரை யாரையும் நூறு நாள் வரை காதலிச்சதே இல்லையே!''

— முருககுமார்.

---

என் சம்சாரம்!'' என்று பாயை விரித்து ''உக்காருங்க'' என்றான்.

ஜமீல் உட்கார்ந்தபடி கேட்டான், ''உங்க லெட்டர் பார்த்தோம். டாக்டர்ஸ் இப்ப என்ன சொல்றாங்க?''

சிறிது நேர மௌனத்திற்கு பிறகு சொன்னான், ''பணமில்லாம இனி டயாலிசிஸ் பண்ண முடியாதுன்னு சொல்லிட்டாங்க ஸார். சீக்கிரம் ஆபரேஷன் பண்ணிடணும்னு சொல்றாங்க. என் நிலைமையைப் பார்த்தீங்களா? கிட்னிக்கு சுலபமா வழி வெச்ச கடவுள், பணத்துக்கு வழி இல்லாம பண்ணிட்டார்...''

''அப்படியா? கிட்னி யார் கொடுக்கறது?''

''என் சம்சாரம்தான். ஆனா எனக்கு இதுல இஷ்டமில்ல சார். டாக்டருங்க யாருக்கும் ஒண்ணும் ஆகாதுன்னு சொல்றாங்க. இவளும் என்னை ஆபரேஷன் பண்ணிக்க வற்புறுத்தறா. இருந்தாலும் எம் மனசுக்கு ஒரு மாதிரியாத்தான் இருக்குது...'' என்றான் தலைகுனிந்தபடி.

''கொஞ்சம் இருங்க...'' என்று சொல்லிவிட்டு உள்ளே போய்க் கற்றையாய்க் காகிதங்களை அள்ளிக் கொண்டு வந்தான்.

''இதாங்க ஸார் என்னோட மெடிக்கல் ரிப்போர்ட்ஸ்...''

ஜமீல் அதை வாங்கிப் பார்த்தான்.

''இதைப் பாருங்க... இதான் எம் பொண்ணு லட்சுமி. இது எம் பையன் ஆனந்தன். இன்னிக்குக் காலையிலேர்ந்து இவங்க சாப்பிடலை. வீட்ல ஒண்ணும் கிடையாது...'' சிரமப்பட்டுக் கண்களில் நீரை அடக்கினான்.

''நீங்க வேலை செய்யும் நிறுவனத்தில்?''

''இல்லீங்க. அவங்க என்னை வேலையை விட்டு எடுத்துட்டாங்க. எதிர்த்து எதையும் கேட்க எனக்கு வலுவில்லை. கடவுள் எவ்வளவு சோதிக்கிறான் பாருங்க. நான் யாருக்கும் எந்தக் கெடுதலும் பண்ணலே. ஆனா என் வாழ்க்கை இப்படி ஆயிடுச்சு...'' கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழுதான்.

அவன் மனைவியும் அவனைப் பார்த்துத் தாங்க முடியாமல் அழுதபடி வீட்டுக்குள் சென்று விட்டாள். குழந்தைகள் அப்பாவைப் பார்த்து அழுதன.

''இராமனாதன் என்ன இது.. ப்ளீஸ்... கண்ட்ரோல் யுவர் செல்ஃப். நீங்களே நம்பிக்கையை இழந்துட்டா எப்படி? உங்க குழந்தைகளுக்காகவாவது நீங்க தைரியமா இருக்கணும்'' என்று ஜமீல் அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தான்.

சிறிது நேரம் தேம்பி விட்டு ''ஸார் நான் என் குழந்தைகளுக்காகவும் என் மனைவிக்காகவும்தான் வாழணும்னு துடிக்கிறேன். மற்றபடி எனக்கு வேறெந்த ஆசையும் கிடையாது ஸார்'' என்றான்.

''கவலைப்படாதீங்க. நீங்க நெனைச்சபடியே நடக்கும். நீங்கதான் உங்க குழந்தைகளைக் காப்பாத்தப் போறீங்க. இந்த இதழிலேயே உங்களைப் பற்றிக் கண்டிப்பா எழுதறோம். போதுமா?'' என்று ஆதரவாய்ச் சொன்னான் ஜமீல். ''சரி நாங்க கிளம்பறோம்.''

''வாங்க... நானும் உங்க கூடவே பஸ் ஸ்டாண்ட் வரைக்கும் வருகிறேன்'' என்ற இராமநாதன், சிறிது தூரம் வந்தபின், ''ஸார் உங்களண்டை முக்கியமா ஒண்ணு சொல்றதுக்காகவே தனியா வந்தேன்'' என்றான்.

''சொல்லுங்க.''

''ஒருவேளை நான் ஆபரேஷன் நடக்கறதுக்கு முந்தியே இறந்துட்டாக் கூட.... எனக்காகச் சேர்த்த பணத்தை என் குடும்பத்துக்குக் கொடுப்பீங்களா...?'' உணர்ச்சிவசப்பட்டபடி விக்கி விக்கிக் கேட்டான்.

''மிஸ்டர் ராமனாதன் என்னை நம்புங்க. உங்களுக்கு ஒண்ணும் ஆவாது. ஏன் மனசைப் போட்டுக் குழப்பிக்கிறீங்க?''

''இல்லீங்க, நீங்க அப்படி ஒரு வாக்குக் கொடுத்தா... செத்தாலும் நிம்மதியாய்ச் சாவேன்.''

சிறிது மௌனத்திற்குப் பிறகு. ''ஐ ப்ராமிஸ் யூ... போதுமா? ஆனா உங்களுக்கு இப்ப அவசியம் தேவைப்படுவது பணம்... மருந்து இவற்றுக்கும் மேலாக செல்ஃப் கான்ஃபிடென்ஸ்தான்'' என்றான் ஜமீல்.

அடுத்த இதழிலேயே இராமனாத

# யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.

வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும் — இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.



செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்யூம் கிளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.

**யூரோக்ளீன்**: உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையுங்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும். **அக்வாகார்ட்**: ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.



உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

**அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.**



| யூரோக்ளீன் | அக்வாகார்ட் | யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட் |
|---|---|---|
| அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் —வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது | நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபையர் | நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள் |

everest/89/EFL/188 R 2-1m

ளைப் பற்றி ஒரு சிறப்புக் கட்டுரை எழுதுவதற்கு ஆசிரியர் கே.எஸ்.ஸிடமிருந்து அனுமதி வாங்கியிருந்தான் ஜமீல். அட்டைப்படக் கட்டுரையாகப் பிரசுரித்து ராமனாதனுக்கு உதவும்படி உருக்கமான வேண்டுகோள் கட்டுரை விடுத்தான்.

அந்த இதழ் வெளியான ஒரு வாரத்திற்குள் அலுவலகத்திற்கு மணியார்டர்களின் வருகை சூடு பிடித்தது. ஒருவர் பெயர் குறிப்பிடாமல் ஐயாயிரம் அனுப்பியிருந்தார். ஒரு வாரத்தில் வசூலான தொகையைப் பற்றி எழுதியவுடன் அடுத்த வாரம் பணம் இன்னும் வேகமாகச் சேர்ந்தது. ஆபரேஷனுக்கு ரெடியாகும்படியும், தேதியைப் பத்திரிகை அலுவலகத்திற்குத் தெரிவிக்கும்படியும் இராமனாதனுக்கு எழுதினான் ஜமீல்.

பத்திரிகை அலுவலகமே பிரமிப்பில் ஆழ்ந்தது. இதுவரை கிட்டத்தட்ட ரூபாய் ஒரு லட்சத்துக்கு மேல் சேர்ந்திருந்தது.

''ஜமீல் எனக்கு ரொம்ப ஆச்சர்யமா இருக்கு. இவ்வளவு ரெஸ்பான்ஸ் இருக்கும்னு சத்தியமா நான் எதிர்பார்க்கலை. ஐ'ஆம் ப்ரவுட் ஆஃப் மை ரீடர்ஸ்!'' என்றார் கே.எஸ்.

ஏழெட்டு நாட்கள் கழித்து ஜமீலின் கடிதத்துக்குப் பதில் வந்தது. ஜமீல்தான் பிரித்தான்:

ஐயா,

உங்கள் கடிதம் கிடைத்தது. சகல விஷயமும் அறிந்தோம். நீங்களும் உங்கள் பத்திரிகைக்காரர்களும் எங்கள் குடும்பத்துக்காக எடுத்துக் கொண்ட அக்கறைக்கும், அன்புக்கும் நானும் என் குழந்தைகளும் என்றென்றும் நன்றி சொல்வோம்.

ஐயா அவர்கள் ஆபரேஷனுக்குக் கஷ்டப்பட்டுப் பணம் சேர்த்திர்கள். ஆனால் ஆண்டவன் ஆபரேஷனுக்கே அவசியமில்லாமல் பண்ணி விட்டான்.

அவர் இல்லாத பட்சத்தில் எங்களிடம்—அதாவது குடும்பத்துக்கு — நீங்கள் வசூலித்த நிதியைக் கொடுக்க வேண்டும் என்று அவர் கோரியிருந்தாராம். அதைச் சொல்லி என்னைத் தைரியமாக இருக்குமாறு அவர் கேட்டுக் கொண்டார். ஆனால் அப்படிப் பெறுவது நியாயமாக எனக்குத் தோன்றவில்லை. நீங்கள் எங்களுக்காகச் சேர்த்த பணத்தை எங்களை மாதிரி ஏழைகள் யாராவது சிறுநீரக ஆபரேஷனுக்குப் பணம் இல்லாமல் தவித்தால் அவர்களுக்குக் கொடுத்து உதவும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
சரஸ்வதி,
W/o. (லேட்) இராமனாதன்.

50

# கமகமக்கும் காப்பி!

"தரமான காப்பியை அபூர்வமாகத்தான் ருசிக்க முடிகிறது. ஏன் இப்படி? நல்ல மணமான காப்பியை எப்படித்தான் தயாரிப்பது? விசாரித்து எழுதுங்களேன்" என்று திருச்சி கல்கி வாசகர் வி. ராதாகிருஷ்ணன் கேட்டிருக்கிறார். காப்பி ஆசை யாரைத்தான் விட்டது? காப்பி நிறுவனங்கள், ஹோட்டல்கள், குடும்பத் தலைவிகள் என்று பலரையும் விசாரித்தோம்.

மணமான காப்பி என்பது என்ன? காப்பி கப் அல்லது தம்ளரை வாயருகே கொண்டு போகும் போதே அதன் ஆவி மணம் மூக்கில் ஏற வேண்டும்! ருசி என்பது நாக்கில் மட்டுமில்லை; மூக்கு அனுபவிக்கும் வாசனைக்கும் அதில் முக்கிய பங்கு உண்டு. இப்படிப்பட்ட காப்பி தயாரிக்க முதலில் பொருளாதார வசதியை மறந்து விட வேண்டும்!

காப்பிக் கொட்டையில் பீபரிதான் உயர் ரகம். (நூறு கிலோ காப்பிக் கொட்டையைத் தரம் பிரிக்கும் போது ஏழு அல்லது எட்டுக் கிலோ பீபரிதான் கிடைக்கிறது!) அடுத்த ரகம் 'ஏ'. பீபரியை மட்டுமே எடுத்துக் காப்பி தயாரித்தால் மணம் நன்றாக இருக்கும்; ஆனால் டிகாக்ஷன் ஸ்ட்ராங்காக இருக்காது. எனவே, பீபரியில் அறுபது சதம்; 'ஏ' ரகத்தில் நாற்பது சதம் என்று கலந்து கொள்ள வேண்டும். கெட்டுப் போன கொட்டைகளைப் பொறுக்கி நீக்குவது மிக மிக முக்கியம்.

வறுக்கும்போது அதிகமாகவோ, குறைவாகவோ வறுபட்டுவிடக் கூடாது. எல்லாக் கொட்டைகளும் சேர்ந்து வெடித்துப் புகை வரும் கட்டம் சரியான பதம். அப்போதைக்கப்போது அரைத்து, டிகாக்ஷன் எடுத்துக் காப்பி கலக்க வேண்டும். டிகாக்ஷன் மீதி வைத்துக் கலந்தால் சுவை இராது. ஃபில்டரின் அமைப்பும் விடுகிற கொதி நீரின் அளவும் முக்கியம். அரை மணி நேரம் பொறுமையாக இறக்கினால் அந்த மணமே அலாதிதான்!

கறந்த பாலைத் தண்ணீர் கலக்காமல் காய்ச்ச வேண்டும். கொதி வரா விட்டால் ஆரோக்கியம் இல்லை. ரொம்பக் கொதித்து விட்டாலோ காப்பி மணம் போச்சு! ஒன்றிரண்டு கொதி வந்ததும் இறக்கி, அவரவர் விருப்பத்துக்கு ஏற்ப சர்க்கரை போட்டு, கரண்டியால் கலந்தபடியே டிகாக்ஷனைச் சேர்த்தால் சரியான பழுப்புச் சாயல் கிடைக்கும் போது நிறுத்தி விடலாம்.

அப்புறமென்ன, நுரை தள்ள ஆற்றி, உறிஞ்ச வேண்டியதுதான்!

தொகுப்பு: **எஸ். வி.**

வண்ணப்படம்: **உத்ரா**



* மாலை நேரத்தில், மனோரம்யச் சூழலில், மணக்கும் காப்பி!

# ஆகாசத் தாமரை

## சென்ற வாரம்...

துருவ் அசாதாரணமான ஆற்றல் உடைய இளைஞன். வெற்றிகளை அணுகும் போது, அவற்றைச் சுலபமாக அடைய முடிவதாலேயே ஏமாற்றத்துக்கு உள்ளாகி, சோர்வடையும் ஒரு மனச் சிக்கலை உடையவனாக விளங்குகிறான்.

சந்தியா அறிவிலும், அழகிலும், செயல் திறனிலும் தனித்து நிற்கும் பெண். துருவ் அவளை நாடிப் பழகுகிறான். ஆனால் அவளும் அவனை நாடினாள் என்பதை அறியும் போது தன் குறிக்கோளின் எல்லை கூறிவிட்டதாக அவன் நினைக்கிறான். தொழிலதிபராகிய தன் அம்மா மஞ்சுளாவிடம் சந்தியாவைத் தன்னால் மணக்க முடியாது என்று கூறுகிறான். இது மஞ்சுளாவுக்கு அதிர்ச்சியைத் தருகிறது. சந்தியாவிடம் ஃபோனில் பேசி, துருவ் அவளுக்குத் தகுதியானவன் இல்லையோ என்று தான் கருதுவதாகத் தெரியப்படுத்துகிறாள். சந்தியா சிரிக்கிறாள்.

## 2

மஞ்சுளாவுக்கு எரிச்சலாக வந்தது. "எதற்குச் சிரிக்கிறாள் இந்தப் பெண்?" கேட்டாள்.

"துருவ் எனக்குத் தகுதியானவர் இல்லேன்னு நீங்க சொல்றீங்க. வேடிக்கை என்னன்னா எனக்கும் அதே சந்தேகம்தான் வந்தது, என்னைப் பற்றி. நான் துருவ்வுக்குத் தகுதியானவளான்னு. இதுவே ஒரு வகையிலே எங்களிடையில் நிலவும் மனப் பொருத்தம்தானே!"

"டோன்ட் பி ஸில்லி... ஐ ஆம் ஸீரியஸ்..." என்றாள் மஞ்சுளா.

"நான் நிஜமாகவே சொல்றேன்... நேத்திக்கி அவரைப் பார்த்த போது அவர்கிட்டேயே சொன்னேன்..." என்று அவள் தொடர்வதற்குள் மஞ்சுளா இடைமறித்தாள். "என்னன்னு?"

"என்னை அவர் ரொம்பப் பாராட்டிப் பேசினார். எனக்கு ரொம்பக் கூச்சமாக இருந்தது. ஏதோ நான் அவரை உதாசீனம் பண்ணிடுவேனோன்னு பயப்பட்ட மாதிரியும் சொன்னார். அப்போதான் நான் சொன்னேன், எனக்குத்தான், அந்த மாதிரி பயமிருந்ததுன்னு. அவர் கவனத்தைக் கவரணும்னு நான் செஞ்சதெல்லாம் அவர்கிட்டே சொன்னேன்."

"அவன் என்ன சொன்னான்?"

"ஒண்ணுமே பேசலே... இதுக்கு முன்னாலே பேசிண்டேயிருந்தவர் திடீர்னு மௌனமாயிட்டார்."

மஞ்சுளா சிறிது நேரம் ஒன்றும் பேசவில்லை.

"என்ன யோசிக்கிறீங்களா?" என்றாள் சந்தியா.

மஞ்சுளா சிரித்துக் கொண்டே கேட்டாள்: "நான் யோசிக்கிறது 'ஃபோன்'லே, தெரியறதா?"

"அவர் உங்ககிட்டே ஏதாவது சொல்லியிருக்கணும். அதை நீங்க சொல்லத் தயங்கறீங்கன்னு நினைக்கிறேன்."

"யு ஆர் எ ஸ்மார்ட் கேர்ல்."

"தாங்க் யூ... என்ன சொன்னார் துருவ், சொல்லுங்க."

"நான்தான் அவனைக் கேட்டேன்... எப்போ கல்யாணம் வச்சுக்கலாம்னு...? பட்... அவன்... உன் பேரிலே அவனுக்கிருந்த 'இன்ட்ரெஸ்ட்' போயாச்சுங்கிறான்.. எனக்கு ஒண்ணுமே புரியலே... எதுக்குடா பழகினேன்னு கேட்டேன்... பதில் சொல்லலே... நேரே தன் ரூமுக்குப் போயிட்டான். கொஞ்ச நேரம் கழிச்சு வீணை வாசிக்கிற சப்தம் கேட்டது... அதனால்தான் சொல்றேன். நீ கெட்டிக்காரப் பொண்ணு, உன் மதிப்புத் தெரியாத ஒரு முட்டாளை..."

சந்தியா குறுக்கிட்டாள்: "ப்ளீஸ்... ஆன்ட்டி, மத்தவங்களுக்கு 'அட்வைஸ்' செய்யறது தப்புன்னு நீங்களே ஒரு தடவை சொல்லியிருக்கீங்க... இது நானே யோசிச்சு எடுக்க வேண்டிய முடிவு... ஐ ஹோப் யு அன்டர்ஸ்டான்ட்..."

"ஷ்யூர்... ஆனா உனக்கு எது நல்லதுன்னு நினைக்கிறியோ, அந்த முடிவை எடுக்கத் தயங்காதே..."

சந்தியா சிரித்துக் கொண்டே, சொன்னாள்: "நான் இந்தக் காலத்துப் பொண்ணுங்கிறதை மறந்துட்டுப் பேசறீங்க, குட் நைட், ஆன்ட்டி."

சந்தியா டெலிஃபோனைக் கீழே வைக்கும் சப்தம் கேட்டது.

அலுவலக அறையைச் சாத்திக் கொண்டு மஞ்சுளா வெளியே வந்தாள்.

உத்தம் சிங் 'டைனிங் டேபிள்' அருகே நின்று கொண்டு கேட்டான்: "கானா லகா தூங், மெம் ஸாப்?"

"எனக்குப் பசியே இல்லை... துருவ் சாப்பிட்டாகி விட்டதா?"

"இல்லை... நான் கூப்பிட்டேன்... சாப்பாடு வேண்டாமென்று சொல்லி விட்டார்."

"எனக்கு ஆப்பிள் நறுக்கிக் கொடு போதும்."

இந்திரா பார்த்தசாரதி



மஞ்சுளா மாடிக்குச் சென்றாள்.

துருவ்வின் அறைக் கதவை லேசாகத் தட்டினாள். பதிலில்லை. மறுபடியும் தட்டினாள்.

துருவ் கதவைத் திறந்தான். ஏதோ எழுதிக் கொண்டிருந்தான் என்று தோன்றியது.

''நீ சாப்பிடலியா?''

''சாப்பிடலேன்னு உத்தம் சிங் கிட்டே சொல்லிட்டேனே ...!''

''சந்தியா ஃபோன் பண்ணினா.''

''ஸோ வாட்? அதுக்காக நான் சாப்பிடணுமா?''

''நாம செய்யறது மத்தவாளை எப்படி 'அஃபெண்ட்' பண்ணும்ங்கிற ஃபீலிங்கே உனக்குக் கிடையாதா...?''

அம்மாவுக்கு என்ன ஆயிற்று? சண்டை போடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டு வந்திருக்கிறாளா? அவன் சாப்பிட்டானா இல்லையா என்பது பற்றிக் கேட்" அவள் வந்திருப்பதாகத் தெரியவில்லை.

சந்தியா என்ன சொல்லியிருப்பாள்?

சந்தியா மற்றைய எல்லாப் பெண்களையும் போல் சராசரிதான்! நேற்று நிரூபித்துக் கொண்டு விட்டாள். அவள் அவனுக்குத் தகுதி உடையவளா என்று சந்தேகமாம்... டாமிட்... இப்படியொரு சாதாரணப் பெண்ணைக் கண்ணுக்கெட்டாத தூரத்திலிருந்து பிரகாசிக்கும் ஒரு தேவதையாக பாவித்தது அவன் தவறு! நேற்று நடந்தது அவன் மனக்கண் முன் நின்றது.

சந்தியா அவன் கைகளைப் பற்றிக் கொண்டு சொன்னாள்: 'நான் மூன்று மந்திரச் சொற்களைச் சொல்லப் போகிறேன், துருவ்.'

'என்ன அவை?'

'ஐ லவ் யூ!'

மந்திரச் சொற்களா அவை? தேய்ந்து, பொருளிழந்து, உயிரிழந்து போன எழுத்துச் சடலங்கள்!

''ஐ ஹேட் சந்தியா'' என்று துருவ் உரத்த குரலில் கூவியது மஞ்சுளாவைத் திடுக்கிட வைத்தது.

மஞ்சுளாவிடம் பேசிய பிறகு, துருவ்வைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தாள் சந்தியா.

துருவ்வை அவள் நாடிச் செல்லவில்லை. அவன்தான் அவளை நாடி வந்தான்.

இண்டியா இண்டர்நேஷனல் செண்டரில் சுற்றுப்புறச் சூழ்நிலைப் பாதுகாப்புப் பற்றி ஒரு தேசியக் கருத்தரங்கு. அவனுடைய பேச்சு எல்லோரையும் கவர்ந்திருப்பதை அவள் உணர்ந்தாள்.

விவாதத்தின் போது அவன் எழுந்தான்: ''என் பேர் துருவ். மிஸ் சந்தியாவை ஒன்று கேட்க விரும்புகிறேன்...''

''ப்ளீஸ்.''

''சுற்றுப்புறச் சூழ்நிலைக்குப் பெரிய ஆபத்து என்று எதை நீங்கள் கருதுகிறீர்கள்?''

"அதைப் பற்றித்தான் அரை மணி நேரம் பேசினேன்."

எல்லோரும் கைதட்டினார்கள். கைதட்டு தலை எதிர்பார்த்து அவள் இதைச் சொல்ல வில்லை. அவள் பேசிய தலைப்பு இதைப் பற்றித்தானே என்று இயல்பாகச் சொன்னாள். மிகவும் 'ஸீரியஸா'கத் தோற்றமளித்த, ஆறடி உயரமிருந்த அவ்விளைஞன், அவனை அவமானப்படுத்துவதற்காக அவள் இப்படிச் சொன்னதாக நினைத்துக் கொண்டு விடக் கூடாதே என்ற லேசான மன நெருடல் அவளுக்குள் ஏற்பட்டது.

"ஐ ஆம் ஸாரி... ஐ மென்ட்..." என்பதற்குள் அவன் இடைமறித்தான்: "பரவாயில்லை. கைதட்டியவர்களைப் பற்றி நான் கவலைப்படவில்லை. கைதட்டுதல் அவர்களுக்கு அல்ப சந்தோஷத்தைக் கொடுக்கிறதென்றால், நான் எதற்காகக் குறுக்கே நிற்க வேண்டும்? சரி, பிரச்னைக்கு வருவோம்... சுற்றுப்புறச் சூழ்நிலையைக் கெடுத்து வருவது பறவைகளோ, விலங்குகளோ அல்ல... மனிதன்தான், அப்படித்தானே?"

"ஆமாம்..."

"அப்படியென்றால், சுற்றுப்புறச் சூழ்நிலைக்குப் பெரிய ஆபத்து மனிதன்தான், இல்லையா?"

"ஆமாம்... அதே சமயத்தில், மனிதனால்தான் இந்தப் பிரச்னைக்குத் தீர்வும் காண முடியும்..."

"மனிதன், தன் பகுத்தறிவின் துணை கொண்டு, இயற்கையின் மீது ஆளுமை செலுத்தி அதில்தான் தன் சாதனையின் எல்லைக் கோடு இருப்பதாக நினைக்கிறான். ஆனால் மனிதனின் இந்தப் போக்கே தான் பிரச்னைகளையும் உருவாக்குகிறது. சுற்றுப்புறச் சூழ்நிலையின் சீரழிவுக்கு இதுதான் காரணம்."

"மனிதனுக்குப் பகுத்தறிவு இருப்பது அவனுக்கேற்பட்ட சாபக்கேடு என்கிறீர்களா?"

"பகுத்தறிவு இட்டுச் செல்லும் பாதை, விதியின் எல்லை. அதற்கப்பால் என்ன இருக்கிறது என்று உணர முயல்வதுதான் பிரபஞ்ச ரகசியம்."

கூட்டத்தில் ஒருவர் எழுந்தார்: "இது என்ன, சுற்றுப்புறச் சூழ்நிலையைப் பற்றிய கருத்தரங்கா, இல்லாவிட்டால் ஆன்மீக விவாத மேடையா...?"

"ஐ ஆம் ஸாரி" என்று சொல்லிவிட்டு அவன் உட்கார்ந்து விட்டான்.

இந்நிகழ்ச்சி நடந்த இரண்டு மாதங்களுக்குப் பிறகு 'அமெரிக்கன் சென்டரி'ல் அவன் அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்து, 'ஹலோ, ஹௌ ஆர் யூ.' என்றான்.

அவளுக்கு அவன் யாரென்று அடியோடு மறந்து போய்விட்டது...

"ஃபைன்... தாங்க் யு... நீங்கள்?"

"துருவ்... 'இண்டியா இண்டர்நேஷனல் சென்டரி'லே..." என்று அவன் சொல்லி முடிப்பதற்குள், "எஸ்... எஸ்... ஐ ஆம் ஸாரி..." என்று இடைமறித்துக் கொண்டே கைகளைக் கூப்பினாள் சந்தியா.

"சுற்றுப்புறச் சூழ்நிலையை எப்படிப் பாதுகாத்துக் கொண்டு வருகிறீர்கள்?" என்றான் துருவ் புன்னகையுடன்.

"மனிதன் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது" என்றாள் சந்தியா சிரித்துக் கொண்டே.

"குட்... அதுதான் மனித வரலாற்றின் சுவாரஸ்யமான விஷயம்," என்றான் துருவ்.

"எதுதான்?"

"மனிதன் தன் மீது நம்பிக்கையை அடியோடு இழந்து விடவில்லை என்பதுதான்!"

அவள் புன்னகை செய்தாள். "இதுதான் என் முகவரி, பிறகு சந்திப்போம்" என்று ஒரு துண்டுக் காகிதத்தில் தன் முகவரியை எழுதி அவனிடம் கொடுத்தாள்.

அதை அவன் வாங்கிக் கொண்டே சொன்னான்: "உங்களிடம் எனக்குப் பிடித்த விஷயம், நான் யாரென்று நீங்கள் கேட்கவில்லை!"

சந்தியாவுக்குச் சற்றுச் சங்கடமாக இருந்தது. "ஐ ஆம் ஸாரி... நீங்கள் துருவ் என்று தெரியும்... உங்கள் முகவரி...?" என்று முடிப்பதற்குள் அவன் குறுக்கிட்டான்: "அதற்குமேல் எதுவும் தெரிந்து கொள்ளத் தேவையில்லை!"

பிறகுதான் அவளுக்குத் தெரிய வந்தது, அவன் யாரென்று. ஒரு குறிப்பிட்ட தொழில் நிறுவனத்தின் அதிபதியான மஞ்சுளாவின் மகன் என்று.

இந்திய ராணுவத்தின் உயர்தர அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்ற சந்தியாவின் அப்பா அவனைப் பற்றிச் சொன்னார்: "அந்தப் பையனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கேன்... எர்ராடிக் ஜீனியஸ்... என்ன பண்றான், இப்போ?"

"தாய்ப்பாசம்னா இப்படில்ல இருக்கணும்!"

"எப்படி...?"

"முதன் முதலா வாங்கின லஞ்சக் கவரைத் தாயின் காலடியில் வைச்சு ஆசீர்வாதம் வாங்கறாரே...!"

— போத்தனூர் புலிச்சோழன்.



''நேற்று நான் கடன் கேட்டப்போ கொடுத்திருந்தீங்கன்னா, உங்களுக்கு அந்தப் பணம் திருட்டுப் போயிருக்காது.''

''என்னைப் பொறுத்தவரைக்கும் இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறதாத் தெரியலே!''

— சீர்காழி. வி. ரேவதி.



அதுதான் அவனுக்குத் தெரியவில்லை. துருவ்வுக்குக் கம்ப்யூட்டரைப் பற்றித் தெரியும், கார் மெக்கானிஸம் அத்துப்படி. ஓவியனாய் இருந்திருக்கிறான். இசையில் அபார ஞானம்... ஆனால் எதிலேயும் நிலையான நாட்டமில்லை... 'இன்வால்வ்மென்ட்' இல்லை.

நேற்று அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கலாமென்று அவளுக்கு இப்பொழுது பட்டது. ''மந்திரச் சொற்கள்'' என்று அசட்டுத்தனமாக அப்படி உளறியிருக்க வேண்டாம்.

துருவ்விடம் இன்று காணும் மாறுதலுக்கு அதுதான் காரணமாக இருக்க வேண்டும்.

அவர்கள் வீட்டு மேல் மாடியில் இருவரும் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவன் மௌனமாக ஆகாயத்தைப் பார்ப்பதில் லயித்திருந்தான். வீசிய மென் காற்று அவள் வீட்டுக்கு எதிர்த்தாற்போலிருந்த 'பார்க்'கிலிருந்த மரப் பூக்களின் நறுமணத்தை லேசாகச் சுமந்து கொண்டு வந்தது.

பக்கத்து வீட்டு முதல் மாடியிலிருந்து மெஹந்தி ஹஸனின் கஸல் மிக மெல்லியதாய் இழைந்து இதயத்தைப் பரிவுடன் தடவியது.

''மெஹந்தி ஹஸன்'' என்றாள் அவள்.

அவன் அவளைப் பார்க்காமலேயே, ஆகாயத்தில் லயித்தபடி கூறினான். ''கேட்கும் இசை இனிமையானது. கேளாத இசை அதை விட இனிமையானது.''

''நீங்கள் பாடி நான் கேட்டதே இல்லை... நீங்கள் வாய்ப் பாட்டிலிருந்துதானே வீணைக்கு வந்தீர்கள்?''

அவன் பதில் கூறவில்லை. அவள் அவனை வற்புறுத்த விரும்பவில்லை. அவள் மெஹந்தி ஹஸன் குரலில் ஆழ்ந்தாள்.

திடீரென்று அவன் பாட ஆரம்பித்தான். எந்தக் குறிப்பிட்ட பாட்டுமில்லை. ஆலாபனைதான். சவுக்க காலத்தில், மிக ஓய்வாக. காலமே ஸ்தம்பித்து நிற்பது போல், உள்ளத்தை நெகிழ்விக்கும் குரலில் பாடினான்.

முதலில் சுபபந்துவராளி; அடுத்தது சஹானா; அப்புறம் சிந்துபைரவி; பிறகு கரகரப்ரியா...

இவ்வளவு அற்புதமான சாரீர வளமை இருக்கும் போது இவன் ஏன் பாடுவதில்லை? இது அவளுக்கு ஆச்சரியத்தைத் தந்தது.

அவன் திடீரென்று நிறுத்தினான்.

எப்படிப் பாராட்டுவது? எப்படி நன்றி சொல்லுவதென்று அவளுக்குத் தெரியவில்லை.

அவன் கண்களை மூடிய நிலையில், எந்தப் பாராட்டையும் எதிர்பாராதவன் போல் உட்கார்ந்திருந்தான்.

அப்பொழுதுதான் அவள் சொன்னாள். அந்த முட்டாள்தனமான மூன்று மந்திரச் சொற்களை! பிறகு அவள் மனம், அவளை எப்படி நாடி அலைந்தது என்று உளறிக் கொட்டினாள்.

'காலிங் பெல்' ஒலித்தது.

சந்தியா கட்டிலிலிருந்து இறங்கி, அறைக்கு வெளியே வந்தாள்.

ஆஷா வாசற்கதவைத் திறந்து கொண்டிருந்தாள்.

அப்பா உள்ளே வந்தார்.

அவர் முகத்தைப் பார்த்தவுடனேயே தெரிந்து விட்டது. கிளப்பில் 'தீராகாரம்' ஆகிவிட்டதென்று. கேட்டால், 'இரண்டுக்கு மேல் குடிக்கவில்லை' என்று இரண்டு வருஷங்களுக்கு முன்பு திடீரென்று இறந்து போன அம்மாவின் மீது ஆணையாகப் பொய் சொல்லுவார்.

அவர் அவள் பார்வையைச் சந்திக்க விரும்பாமல் தம் அறைக்குச் சென்று விட்டார்.

சந்தியா சிறிது நேரம் கழித்து அவர் அறைக்குச் சென்று கதவைத் தட்டினாள்.

அவர் கதவைத் திறந்தார்.

''குடிக்கிறதே அருவருப்பான விஷயம். வீட்டிலே குடிச்சாலும் சகிச்சுக்கலாம். கிளப்பிலே குடிச்சுட்டு நீங்களே ட்ரைவ் பண்ணிண்டு வர்றீங்க. ஆபத்தில்லையா? நோ கன்ஸிடரேஷன் ஃபார் மீ?''

''மைடியர் கேர்ள்... உங்கம்மா போனதிலிருந்து...'' என்பதற்குள் அவள் இடைமறித்தாள்: ''உங்களாலே தாங்கிக் கொள்ள முடியலே. அப்படித்தானே? நீங்களே உங்களை ஏமாத்திக்கிறீங்க...''

''நோ... நோ... நோ...'' என்று உரத்த குரலெழுப்பிக் கூறியவர் தொடர்ந்தார்: ''நீங்கள்ளாம் மாடர்ன். மாடர்ன்னா என்ன அர்த்தம் தெரியுமா? எல்லாமே தற்காலிகந்தான். உங்களுக்கு ஒருத்தரை ஒருத்தர் பிரியாம தம்பதிகளா முப்பது முப்பத்தைந்து வருஷங்கள் இருக்கிறதுன்னா. என்னன்னே

தெரியப் போறதில்லே... உங்க வால்யு — ஸிஸ்டம்' அப்படி...''

அவர் தார்மிகக் கோபத்துடன் பேசுவது போல் சற்றுக் குரலை உயர்த்திப் பேசினார். உடம்பு சிறிது ஆட்டம் கண்ட காரணத்தினால், அறைக் கதவைப் பிடித்துக் கொண்டார்.

''நான் ஒன்று உங்களைக் கேட்கலாமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் சந்தியா.

''என்ன?''

''உங்கள் மேலான 'வால்யு — ஸிஸ்டம்' கணவனோ, மனைவியோ ஒருவர் முன்னால் இறந்து விட்டால், இருப்பவர் குடித்துக் கொண்டே இருக்கலாமென்று கூறுகிறதா?''

ஓய்வு பெற்ற லெஃப்டினன்ட் ஜெனரல் மூர்த்தி புன்னகை செய்தார். இதுதான் அவர் தம் தோல்வியை ஒப்புக் கொண்டதற்கு அடையாளம்.

''சரி... சாப்பிட வாங்க... இப்படிக் குடிச்சுட்டு சாப்பிடாம தூங்கக் கூடாது... வாங்க...'' என்று அவர் கையைப் பற்றினாள் சந்தியா.

''உன்னோட 'ஆர்க்யூ' பண்ணினதிலே, குடிச்சதோட 'எஃபெக்ட்' எல்லாம் போயாச்சு'' என்று சொல்லிக் கொண்டே சாப்பாட்டு மேஜை முன் வந்து அமர்ந்தார் மூர்த்தி.

ரொட்டியும் சப்ஜியும் சாப்பிட்டவாறே, ''ஆர் யு ஸீரியஸ் அபௌட் துருவ்?'' என்று கேட்டார்.

''எதுக்குக் கேக்கறீங்க?''

''நீயோ சமூகப் பிரச்னைகளுக்காக வாதாடிண்டிருக்கிற அட்வகேட்... அவனோ, லுக்ஸ் லைக்...'' என்று அவர் மேலே தொடராமல் நிறுத்தினார்.

''சொல்லுங்க.''

''டோட்டலி 'ஆன்டி-ஸோஷல்' அவன் நடந்துக்கிற விதம். யாரோடும் பேசறதில்லே. அவன் பேசறதுக்குத் தகுதியான ஆளே இந்த உலகத்திலேயே இல்லேங்கிறதுதான் அவன் அபிப்பிராயம்... இங்கே வர்றபோதெல்லாம், அவன் என்கிட்டே எதைப் பத்திப் பேசறான் தெரியுமா? 'காக்டெய்ல்' பத்தி! எனக்கு அதைத் தவிர வேறொண்ணும் தெரியாதுன்னு அவன் அபிப்பிராயம்! உனக்கும் அவனுக்கும் ஒத்துக்கும்னு நினைக்கிறியா?''

''சிறிது நேரத்துக்கு முன்பு ஃபோன் வந்தது'' என்று சொன்னாள் சந்தியா.

''யாரிடமிருந்து?''

''மஞ்சுளா ஆன்ட்டியிடமிருந்து.''

''என்ன சொன்னா?''

''நீங்கள் சொல்வதைத்தான் 'ஆன்ட்டி'யும் வேறுவிதமாகச் சொன்னார், துருவ் எனக்குத் தகுதியுடையவர் இல்லை என்று.''

''கரெக்ட்... ஒரு அம்மாவே தன் பிள்ளையைப் பத்தி இப்படிச் சொல்லியிருக்கான்னா... உன் அழகுக்கும் அறிவுக்கும் செயல் துடிப்புக்கும்...'' என்று அவர் அடுக்கிய போது, சந்தியா சொன்னாள்: ''ப்ளீஸ்... எனக்கு இதைக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போச்சு! நான் துருவ்வைப் புரிந்து கொள்ள விரும்புகிறேன்.''

''அவனை ஒரு சைக்யாட்ரிஸ்ட்டிடம் தான் அனுப்ப வேண்டும். அவரால்தான் அவனைப் புரிந்து கொள்ள முடியும். ஒரு மனிதனுக்கு இவ்வளவு புத்தியைக் கொடுத்து விட்டு, அதை எதற்கும் பயன்படாமலும் செய்து, ஒரு மனித வாழ்க்கையை ஏன்தான் விரயமாக்கியிருக்கிறாரோ கடவுள், அதுதான் எனக்குப் புரியவில்லை. வேண்டுமானால், கடவுளையும் ஒரு சைக்யாட்ரிஸ்ட்டிடம் அனுப்பலாம்!''.

''நேற்று அவர் இங்கு வந்திருந்த போது...''

''ப்ளீஸ்...'லெட் ஹிம் கோ டு ஹெல்... அவனைப் பற்றி இனிமேல் பேசாதே...''

மூர்த்தி எழுந்து 'சிங்க்'கில் கையைக் கழுவிக் கொள்ளச் சென்றார்.

அப்பாவிடம் இதைப் பற்றிப் பேசியிருக்க வேண்டாமோ என்று அவளுக்குத் தோன்றியது. ஆனால் அவரைத் தவிர வேறு யாரிடம் தன் உணர்ச்சிகளை அவளால் பகிர்ந்து கொள்ள முடியும்? சின்ன வயதிலிருந்தே அவள் அப்பா பெண்தான். அவர்தான் அவளைப் பல்வேறு வகைகளில் ஊக்குவித்தவர்.

அவர் துண்டில் கைகளைத் துடைத்துக் கொண்டே கேட்டார்: ''என்ன செய்வதாக இருக்கிறாய்?''

''என்ன செய்ய வேண்டுமென்கிறீர்கள்?''

''நீ கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். ஆகாயத்தில் பறந்து கொண்டிருக்காமல், பூமியில் பாதங்கள் பதிந்த, படித்த ஒரு நல்ல இளைஞனைத் தேர்ந்தெடுத்து என்னிடம் வந்து சொல்... திருமணத்தை நடத்தி விடலாம். இந்த வக்கிரம் உனக்கு உதவாதென்றுதான் எனக்குத் தோன்றுகிறது.''

''இது எனக்கு ஒரு சவால்.'' என்றாள் சந்தியா.

''எது?''

''துருவ்... என்னையும் ஒருவரால் உதாசீனம் செய்ய முடியுமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை!''

''ஆர் யு கிரேஸி? உன் சவாலுக்கு வேறு எத்தனையோ பெரிய விஷயங்கள் இருக்கின்றன. என் மகளை உதாசீனம் செய்தவனை என்னால் பொறுத்துக் கொள்ள முடியுமென்று நினைக்கிறாயா? ஐ வில் கில் ஹிம்'' என்று கோபத்தில் கத்தினார் மூர்த்தி.

''மே பி யு ஆர் ரைட்... என் நேரத்தை இந்த விஷயத்தில் ஏன் விரயம் செய்ய வேண்டுமென்றும் தோன்றுகிறது.'' என்றாள் சந்தியா.

(தொடரும்)

# ஜிட்டா

என் மனைவி வனஜா எப்போதும் புலம்புவாள். காரணம், நான் ஒரு வெட்டினரி டாக்டர்!

''ரெண்டு பேர் வந்து 'டாக்டர் இருக்காரா'ன்னு கேட்டுட்டு, உங்க போர்டை படிச்சுட்டு, 'அட! மிருகடாக்டர்'ன்னு கேலி பண்ணிட்டுப் பக்கத்து வீட்டுக்கு போயிட்டாங்க...''

எங்கள் பக்கத்து வீட்டில் டாக்டர் ராஜு, எம். பி. பி. எஸ். எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றுவதற்காகவே பக்கத்து வீட்டில் குடியேறியவர். அவர் மனைவி சகுந்தலாவுக்குத் தன் கணவனின் அருமை பெருமைகளை அலட்டிக் கொள்வதே வேலை. அது வனஜா மூலம் என்னைத் தாக்கும்.

'இருபது வயசுப் பையனுக்கு நேத்து ஹார்ட் சர்ஜரியாம். டாக்டர் ராஜு போராடிக் காப்பாத்திட்டாராம். ஊர் பூரா அலட்டிக்கிட்டா அவ.. என்னால அலட்ட முடியுமா? என் புருஷன் நாயிக்கும் பூனைக்கும் மருந்து கொடுத்தாருன்னு அலட்டிக்கவா முடியும்?''

இந்தப் புலம்பலிலிருந்து தப்பிக்க, இரவும் தாமதமாக வருவது வழக்கம். மண்டல் கமிஷன் அறிக்கையை விட பெரிய சிக்கலை எனக்கு அது ஏற்படுத்தி விட்டது.

''கோயம்புத்தூரிலிருந்து ஓர் ஆடிட்டர் என்னைப் பெண் பார்க்க வந்தார். நீங்க ஏதோ பார்க்க லட்சணமா இருக்கீங்களேன்னு சம்மதிச்சேன். பால் வடியும் முகம் பார்த்து ஏமாந்தேன்.''

''வனஜா, உனக்கென்னம்மா குறை?''

''அந்த ராஜுவைப் பாருங்க. எங்கே போனாலும் குடும்பத்தோடு போறாரு. எனக்கு அந்தச் சுகம் உண்டா?''

''என்னுடைய முதல் வில்லன் டாக்டர் ராஜு...'' கோபமாகக் கத்தி விட்டுப் படுத்துக் கொண்டேன். குழந்தை சம்யுக்தா வந்து கட்டிக் கொண்டது. பக்கத்தில் படுத்தாள் வனஜா. ''என்ன கோபமா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே.''

''மனசை விட்டுத் திட்ட மாட்டீங்களா?''

''திட்டுறமாதிரி என்ன சொல்லிட்டே?''

''ஏன் இப்படி மனசுக்குள்ளேயே போட்டுப் போட்டு அழுக்குறீங்க? வெளிப்படையாப் பேச மாட்டீங்களா?''

''இப்ப என்ன வேணும் உனக்கு?''

சம்யுக்தா எங்களையே கண்கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தாள். அவள் சம்பந்தப்பட்ட விஷயம் ஏதோ வெளிவரப் போகிறது.

''நாளைக்குச் சீக்கிரம் வாங்க.''

''ஏன்?''

''சர்க்கஸ் வந்திருக்குப்பா'' என்றாள் குழந்தை. அவள் கண்களில் ஆர்வம்.

''ஆமாங்க. நாளைக்குப் போகலாம்.''

''நாளைக்கே போகணுமா?''

''சகுந்தலா நாளைக்குத்தானே போகப் போறா குடும்பத்தோடு...''

நான் தலையாட்டினேன்.

பல்ராம் சர்க்கஸ்!

மைதானத்தின் நடுவே வட்ட வடிவமான டெண்ட். ''வனஜா, எந்த டிக்கெட் வாங்கட்டும்?''

''டீலக்ஸ் ரோ வாங்குங்க. சகுந்தலா அங்கேதான் இருப்பா.''

உள்ளே டாக்டர் ராஜு குடும்பத்தோடு அமர்ந்திருந்தார். என்னைப் பார்த்துக் கை அசைத்தார். பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன்.

சர்க்கஸ் ஆரம்பித்து விட்டது. முதலில் ஒட்டகம் வந்தது. அதன் மேலே பெயர் பானரைப் பிடித்துக் கொண்டு ஓர் அழகி.

மெல்ல வந்து கொண்டிருந்த ஒட்டகம், தடாலென்று நின்று விட்டது. உற்று நோக்கினேன். அது சோர்வாய் இருந்தது போலிருந்தது.

''ஜிட்டா! ஜிட்டா!'' என்று அதன் செல்லப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாள் அழகி. பஃபூன்கள் ஓடி வந்தார்கள். இசை நின்றது. கோட் அணிந்த ஒருவர் ஓடி வந்தார்.

''ஜிட்டா! ஜிட்டா!'' என்று அனைவரும் உலுக்கினார்கள்.

ஜிட்டாவைத் தொட்டுப் பரிசோதித்தேன். ஆயிரம் வாட்ஸ் பல்ப் நடுவே நடக்கும் இதை, ஏதோ நிகழ்ச்சி போல ஜனங்கள் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''வெளியே தள்ளிட்டு வாங்க'' என்றேன்.

ஜிட்டாவைத் தள்ளிக் கொண்டு வந்தார்கள்.

''இதுக்கு என்ன பிரச்னை?''

''சாப்பிட்டு ஒரு வாரமாச்சு. தண்ணி

பாக்ஜி



கூடக் குடிக்கறதில்லை.''

''டார்ச் இருக்கா?''

கொடுத்தார்கள். கண்கள் — வாய் — மூக்கு என்று சகலத்தையும் ஆராய்ந்தேன்.

''கடைசியா என்ன சாப்பிட்டது?''

''வெங்காயம், புல்லு, வைக்கோலு, காய்கறி, மருதாணு'ன்னு எல்லாம் சாப்பிடும்.''

''இதுதான் ஜிட்டா தங்கும் இடமா?''

''ஆமாங்க சார்.''

நான் சுற்று முற்றும் பார்த்தேன். தார்ப் பாய்கள், டயர்கள், கருப்பு ரப்பர் துண்டுகள், கோணி நூல், காலி சிகரெட் பெட்டிகள்... மினி குப்பைத் தொட்டி போலிருந்தது!

''மிஸ்டர் பல்ராம் இது கண்டதைத் தின்னுருக்கும். அதுதான் பிராப்ளம்னு நெனைக்கிறேன். அரை கிலோ எப்சம் சால்ட் கொடுங்க. கார்போகோல் இன்ஜெக்ட் பண்றேன். இரண்டு நாள் கழிச்சு வந்து பார்க்கிறேன்.''

மூன்றாவது நாள் ஒரு கார் வந்து என் வீட்டில் நின்றது. சந்தேகமே இல்லை. சர்க்கஸ் கார்.

பல்ராமே நேரில் வந்திருந்தார். ''டாக்டர், இந்த சர்க்கஸை பத்தாயிரத்துக்கு வாங்கினேன். ஆரம்பத்திலே பயங்கர நஷ்டம். ஜிட்டா வலது கால் வச்ச உடனேதான் அதிர்ஷ்டம்.''

''சரி, சரி வரேன்...'' என்று புறப்பட்டுப் போனேன்.

காஸ்' ரோடமி. ஜிட்டாவுக்கு எந்தப் பயனையும் அளிக்கவில்லை. பல்ராம் வந்தார். ''வேறு வழியேயில்லை. ஆபரேஷன் நான் செய்யணும்.''

''டாக்டர்! எனக்கு ஜிட்டா வேணும். எதாவது செய்யுங்க...''

ஜிட்டாவைப் படுக்க வைத்தேன். கழுத்து வழியே ஊசி போட்டு மயக்கமுறச் செய்தேன். சுற்றுப்புறத்தைச் சுத்தமாக்கி விட்டுக் கோதாவில் இறங்கினேன்.

முழங்காலிட்டு அமர்ந்தேன். முதலில் முடிகளை 'ஷேவ்' செய்து விட்டு, அறுவைச் சிகிச்சை செய்யுமிடத்தில், நோய்க் கிருமிகள் நுழையாமலிருக்க ஊசி போட்டேன்.

இடுப்பு எலும்பிலிருந்து, கடைசி 'ரிப்' கீழே தோலைக் கிழித்தேன். சதையைப் பிரித்துப் பெரிடோனியத்தை அடைந்தேன். கிளிப் செய்து வசதி செய்து கொண்டேன்.

காஸ் வெளியேறியது. ஒட்டகத்தின் வயிற்றுக்குள் கையை நுழைத்தேன். துழாவினேன். கல் மாதிரி ஏதோ தென்பட்டது. எடுக்க முடியவில்லை. நிறையக் கல் இருக்கும் போலிருந்தது. 'தம்' பிடித்து முயன்றேன். கையோடு வந்தது. கைக்கடக்கமாய் உள்ள நாற்பதுக்கு மேலே எடுத்துப் போட்டேன்.

''இதுதான் கான்ஸ்டிபேஷனுக்குக் காரணம்!''

''தாங்க்ஸ் டாக்டர். எம்.பி.பி.எஸ். படிச்ச டாக்டருங்க கூட மனுஷன் இறப்பைச் சர்வ சாதாரணமா எடுத்துக்குவாங்க. நீங்க போராடி ஜெயிச்சீங்க. தாங்க்ஸ்'' என்றார் பல்ராம்.

பதினைந்து தினங்கள் கழித்து டீலக்ஸ் ரோவில் நான் — வனஜா — சம்யுக்தா.

ஜிட்டா வந்தது. பயங்கர இன்னிசை என் எதிரே நின்றது.

பல்ராம் மைக்கில் என்னை அழைத்தார். இன்ப அதிர்ச்சி! அரங்கத்தில் ஜிட்டா பக்கத்தில்.

''இவர்தான் என் ஜிட்டாவைக் காப்பாற்றிய தெய்வம்.''

அரங்கமே கை தட்டியது. வனஜா கூடக் கை தட்டினாள். இனி என் தொழிலைக் கேவலமாக நினைக்க மாட்டாள்!

நான் நன்றியோடு ஜிட்டாவைப் பார்த்தேன்.

## "எனக்கென ஒரு சொந்த வீடா?"



## "நம்ப முடியவில்லையே!"

அது உண்மை! இப்போது யார் வேண்டுமானாலும் ஒரு வீட்டிற்குச் சொந்தக்காரர் ஆகலாம். ஆம், ஹோம் லோன் அக்கவுண்ட் திட்டத்தின் மூலம்தான்.

கடன் வசதி இணைந்த இச்சிறப்பு சேமிப்புத் திட்டம், நீங்கள் வீடு வாங்க கடன் பெற வசதி செய்கிறது. உங்களுக்கு நீங்களே உதவிக்கொள்ளும் வகையில் வடிவமைக்கப்பட்டது. மேலும், உங்கள் வசதிக்கும், விருப்பத்திற்கும் ஏற்ப சேமிக்கலாம். இத்திட்டம் மாதவருவாய் பெறுவோர், தினக்கூலி பெறும் தொழிலாளிகள், தொழில் நிபுணர்கள் வியாபாரிகள் மற்றும் விவசாயிகளுக்குப் பெரிதும் உதவுகிறது. அத்துடன் கவர்ச்சிகரமான வரிச்சலுகைகளையும் அளிக்கிறது.

ஹோம் லோன் அக்கவுண்ட் ஒரு தேசிய திட்டம். உங்கள் அருகாமையிலுள்ள அரசுடமை வங்கிகளை அல்லது மற்ற பல ஷெட்யூல்ட் வங்கிகள் ஏதேனுடனாவது, நாட்டில் எங்கு வேண்டுமானாலும், தொடர்பு கொண்டு, ஹோம் லோன் அக்கவுண்ட் திட்டத்தை இன்றே துவக்குங்கள்.

**பொது இலக்கு : அனைவருக்கும் வசிப்பிடம்**

**நேஷனல் ஹவுஸிங் பாங்க்**

(இந்திய ரிசர்வ் வங்கியின் முழு உடைமை)
ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஹவுஸ் (9 வது மாடி),
18-20 கஸ்தூர்பா காந்தி மார்க்,
நியூ டில்லி-110 001.
பாம்பே லைஃப் பில்டிங் (3 வது மாடி)
45, வீர் நரிமன் ரோடு, ஃபோர்ட்,
பம்பாய்-400 023.

# அன்பும் தோற்கும்


கல்லூரியில் விபாவின் தோழி...
விபா! நீ ராஜாவைக் காதலிக்கிறதா தொணுது.. நான் சொல்றேன்னு கோபிக்காதே! அவன் கெட்டவன்... கஞ்சா கூட அடிப்பான்.. ஜாக்கிரதை!
விபா உறுதியாக...
நான் அவரை நல்லவரா மாற்றிடுவேன்... அன்பினால் ஆகாதது ஒண்ணுமில்லை!
ராஜாவின் தேனொழுகும் பேச்சு விபாவை அடிமை யாக்கியது...
லெட்ஸ் கெட் மாரீட் யார்.. ஐ லவ் விபான்னு தினம் ஆயிரத் தெட்டு தடவை ஜபிக்கிறேன்..
ராஜாவின் அப்பாவும் விபாவை எச்சரித்தார்...
என் பிள்ளையைப் பற்றி எனக்கே சந்தேகமா இருக்கு விபா... யோசிச்சு முடிவு பண்ணு.
எங்க காதல் எல்லா இடையூறு களையும் வெற்றி கொள்ளும்..







**நா**ளுக்கு நாள் ராஜாவின் பணத் தேவை ரொம்ப அதிகமாகியது. ஏகமாகக் கடன் வாங்கினான். விபா நகைகளை விற்றுக் கடனை அடைக்க வேண்டிய நிர்ப்பந்தம் வந்தது. எப்படி இவ்வளவு கடன் ஏற்பட்டது? என்று கேட்ட போது, நண்பர்களுக்கு ஆபத்துக்கு உதவக் கடன் வாங்கினேன் என்றான் ராஜா. ''என்னிடம் உனக்கு அன்பில்லையா? நம் காதல் என்னை ஆயிற்று?'' என்று கேட்டு அவளைத் தர்ம சங்கடத்துக்குள்ளாக்கினான்.

ஒரு நாள் ஒரு வீடியோக் கடைக்காரர் விபாவிடம் வந்து, ''உன் கணவர் என் கடையிலிருந்து நாலு டெக் வாடகைக்கு எடுத்துப் போனார்; திருப்பித் தர வில்லை...'' என்று புகார் செய்ய; அந்த டெக்குகளை ராஜா அடகு வைத்துவிட்டான் என்பதைக் கண்டுபிடித்தாள் விபா.

மனமொடிந்து போய் இதற்குமேல் தாங்க முடியாது என்ற நிலையில் மனநல ஆலோசகர் டாக்டர் ருத்ரனை அணுகினாள்.

**இ**ருவரையும் தனித்தனியே விசாரித்தார் டாக்டர் ருத்ரன்.

''விபாவின் சந்தோஷத்துக்காகத்தான் நான் எல்லாவற்றையும் செய்கிறேன். நிறையச் சம்பாதித்து அவளை ராணி போல் வைத்துக் கொள்வதற்கான ஆரம்ப முயற்சிதான் இதெல்லாம்'' என்றான் ராஜா.

''உன் அன்பை நிரூபிக்க நீ அவளுக்கு ஒரு சின்ன பரிசாவது வாங்கித் தந்திருக்கிறாயா?'' என்று டாக்டர் கேட்ட போது;

''என் விபாவுக்குக் கேவலம் பட்டுப்புடைவையோ, நெக்லஸோ வாங்கித் தந்தால் போதுமா? அவளுக்கு மிகப் பெரிய, பரிசு வாங்கித் தருவேன்; வீடே கட்டித் தருவேன்'' என்றான்.

விபாவோ, ''அவர் செய்வது தப்பு என்று தெரியும்; ஆனால் அவரை நான் மிக மிக ஆழமாக நேசிக்கிறேன்'' என்றாள்.

''**உ**ண்மையில் ராஜா ஒரு anti-social personality'' என்று விளக்குகிறார் டாக்டர் ருத்ரன். ''இவ்வகை ஆளுமை உடையவர்கள் சிறு வயதிலிருந்தே பொய் சொல்வார்கள், சில்லறைத் திருட்டுக்களில் ஈடுபடுவார்கள். பதினாறு பதினேழு வயதுக்குள் இவர்களைத் தனிமைப்படுத்தி, சிறப்புப் பள்ளிகளுக்கு அனுப்பினால் இவர்களைத் திருத்த வாய்ப்புண்டு. ஆனால் இத்தகையவர்களுக்கான சிறப்புப் பள்ளிகள் நம் நாட்டில் இல்லை. ராஜாவும் திருந்தாமலே வளர்ந்து, சூதாட்டம், போதைப் பழக்கம் ஆகியவற்றுக்கு அடிமையாகியிருந்தான்.

''ராஜா திருந்தவே மாட்டான் என்று தெரிந்தும் இத்தம்பதியைச் சேர்ந்து வாழ அறிவுரை வழங்கிப் பயனில்லை. அதற்கேற்றாற்போல் ராஜாவின் அப்பாவும் அவனை வீட்டை விட்டு வெளியேற்றி விட்டார். 'நீ ஒழுங்காக ஒரு வேலையில் சேர்ந்து உருப்படியான மனிதனாகத் திரும்பி வந்தால் தான் இந்த வீட்டில் இடம்' என்று கூறிவிட்டார்.

''விபாவுக்கு anti-social personality பற்றி விளக்கினேன். அவள் ராஜாவை இழப்பதற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அறிவுரை கூறினேன். ஆனால் ராஜா திருந்திய மனிதனாகத் திரும்பி வருவான் என்று அவள் இன்னமும் நம்புகிறாள்.

''இந்தச் சிக்கலை என்னால் தீர்க்கவே முடியவில்லை. இக்கதை திருமணத்தை எதிர்நோக்கியுள்ள எல்லோருக்குமே எச்சரிக்கையாக அமையும். Anti-Social Personality யை அடையாளம் காணக் கற்றுக் கொள்ளுங்கள். 'இதயத்தைப் பறிகொடுத்து விட்டேன்' என்று இவர்களுக்காகத் தியாகங்களைச் செய்யாதீர்கள். அவை விரயமாகி, நீங்கள் மேலும் மேலும் புண்படுவதுதான் மிச்சமாகும்.''

பேட்டி: சீதா ரவி

# "டாக்டர்களே! இந்தியாவின்

கேள்வி: நீங்கள் அண்மையில் சென்னையிலுள்ள அரசு பொது மருத்துவமனையில் டாக்டர்களை அழைத்துப் பேசியிருக்கிறீர்கள். அதில் டாக்டர்கள் அனைவரும் குறிப்பிட்ட நேரத்திற்கு வருவதில்லை என்றும் சொல்லியிருக்கிறீர்கள். இது ஏதோ சென்னையிலுள்ள பெரிய அரசு மருத்துவமனைகளில்தான் என்பதில்லை. கிராமங்களிலுள்ள ஆரம்ப சுகாதார நிலையங்களிலும் இதே கதைதான். குறிப்பிட்ட நேரங்களில் அங்கெல்லாம் டாக்டர்கள் இல்லாமலிருந்ததை நாங்களே நேரில் கண்டு எழுதியிருக்கிறோம்...

மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் பொன்முடி: உண்மைதான். பல ஆரம்ப சுகாதார நிலையங்களில் டாக்டரே இல்லாமலிருந்த நிலையும் முந்தைய ஆட்சியில் இருந்தது. நாங்கள் வந்த பிறகு, இரண்டாயிரம் புதிய டாக்டர்களை நியமித்திருக்கிறோம். சர்வீஸ் கமிஷன் மூலம் மட்டுமே டாக்டர்களைத் தேர்ந்தெடுத்து கிராமப் புறங்களில் நியமிக்கும் போது, அந்த கிராமங்களில் இருக்கப் பிடிக்காதவர்கள் — சுயநலத்தை விடத் தயாராக இல்லாதவர்கள் உடனடியாக ஒரு மாதம் இரண்டு மாதம் என்று விடுமுறை எடுத்துக் கொண்டு போய் விடுகிறார்கள். டாக்டர்களே இல்லாமலிருந்தால் புதிய டாக்டர்களை நியமிக்கலாம். லீவு போட்டு விட்டுச் செல்கிறவர்கள், இடத்தில் என்ன செய்வது? இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் நியமித்த புதிய டாக்ட்ர்களில் அறுநூறு பேரைத் தாற்காலிகப் பணி என்கிற அடிப்படையில் நியமித்திருக்கிறோம். அவர்கள் விடுமுறையில் செல்ல முடியாது. அப்படிச் சென்றால் சம்பளம் கட் செய்யப்படும் என்பதால் அவர்கள் நல்ல முறையில் கிராமங்களில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இதையும் மீறித் தவறு செய்பவர்களை என்ன செய்வது? இது பற்றிய முடிவை அரசு தன்னிச்சையாகவே எடுத்து விட்டது என்கிற குறை, பிறகு வந்து விடக் கூடாது என்பதற்காகத்தான் மாதத்திற்கு ஒருமுறை சென்னையிலுள்ள டாக்டர்களைக் கூட்டி அவர்களுடன் விவாதிக்கிறேன். அவர்களில் பலர் அரசோடு ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறார்கள். சுயநலம் காரணமாக ஒத்துழைக்க மறுப்பவர்களையும் அவர்களின் மனத்தை மாற்றி ஒத்துழைக்கச் செய்ய வேண்டும் என்பதுதான் அரசின் ஆசை.

கேள்வி: சில கிராமங்களிலுள்ள டாக்டர்களிடம் அவர்கள் ஏன் அங்கேயே தங்குவதில்லை என்று கேட்டால், தங்குவதற்கு குவார்ட்டர்ஸ் வசதி இல்லை என்பார்கள் அல்லது இருக்கிற குவார்ட்டர்ஸில் வசதிகள் ஏதும் இல்லை என்பார்கள். ஆக, அரசுத் தரப்பிலும் குறையிருக்கிறதல்லவா?

பொன்முடி: இது மட்டும்தான் உண்மையான காரணமென்று நம்ப முடியுமா? நிச்சயமாக இல்லை. கிராமங்களில் சில அசௌகரியங்கள் இருக்கலாம். நான் மறுக்கவில்லை. அதற்காக எல்லா வசதிகளும் வந்த பிறகுதான் கிராமங்களில் போய்த் தங்குவேன் என்று சொல்வது, எந்த விதத்திலும் நியாயமில்லை. சிலவற்றைப் பொறுத்துக் கொண்டுதான் ஆக வேண்டும். இந்தியாவின் ஆத்மா நமது கிராமங்களில்தான் இருக்கிறது என்று நமது தேசத்தந்தை சொன்னதை மறந்து விடக் கூடாது. டாக்டர் தொழில் மற்ற தொழில்களைப் போன்றதல்ல. இது உயிர் காக்கும் புனிதமான சேவை.

கேள்வி: ஆனால், மருத்துவக் கல்லூரியில் சேருவதற்கே எக்கச் சக்கமாகப் பணம் செலவழிக்க வேண்டிய சூழ்நிலையில் அவர்கள் இத்தொழிலையும் வியாபாரமாகத்தானே செய்வார்கள்?

பொன்முடி: அரசு மருத்துவக் கல்லூரிகளில் சேருவதற்கு யாராவது பணம் செலவழித்ததாகச் சொல்லச் சொல்லுங்கள்.... அதெல்லாம் சும்மா. தனியார் மருத்துவக் கல்லூரிகளுக்கு அது சரியாக இருக்கலாம். ஆனால் இப்போதிருக்கும் டாக்டர்களெல்லாம் தனியார் மருத்துவக் கல்லூரிகளிலா படித்தார்கள்? அந்தக் கூற்றை ஒப்புக் கொள்ளவே முடியாது. ஒரு டாக்டர் உருவாக அரசு செலவழிக்கும் தொகைக்கும் அவர் பயிற்சி பெறச் செலுத்துகிற கட்டணத்துக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு.

கேள்வி: கிராமப்புறங்களில் உள்ள ஆரம்பச் சுகாதார நிலையங்கள், தாய் — சேய் நல விடுதிகள் இவற்றின் கட்டடங்கள்



# ஆத்மாவைக் கவனியுங்கள்!”

## — அமைச்சர் பொன்முடி கூறுகிறார்...

சில இடங்களில் கட்டி முடிக்கப்பட்ட சில ஆண்டுகளிலேயே விரிசலடைந்து, உபயோகிக்க முடியாத அளவுக்கு மோசமான நிலையிலிருப்பதைக் கண் கூடாகவே கண்டிருக்கிறோம்.

பொன்முடி: முந்தைய ஆட்சியில் கட்டப்பட்ட கட்டடங்கள் வேண்டுமானால் அப்படி இருக்கலாம். இப்போது இல்லை. ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆரம்ப சுகாதார நிலையங்கள் தமிழகத்தில் இருந்தாலும் இதுவரை 150 க்குத் தான் சொந்தக் கட்டடங்களே இருந்தன. நாங்கள் ஆட்சிக்கு வந்த பிறகுதான் மேலும் 157 புதிய கட்டடங்கள் கட்ட நிதி ஒதுக்கி வேலைகளைத் துவங்கினோம். அது மட்டுமல்ல; தண்ணீர் வசதியில்லாத ஆரம்ப சுகாதார நிலையங்களுக்கும் தண்ணீர் வசதி செய்திருக்கிறோம். இத்தனை வசதிகளைச் செய்து கொடுத்தும் அவர்கள் கிராமங்களில் தங்கவில்லையென்றால் என்ன செய்வது? உங்களைப் போன்ற பத்திரிகைகள் இதற்கான வாதங்களைப் பொது மக்களிடையே எடுத்துச் சென்று, மக்களிடையே ஒரு விழிப்புணர்வைத் தோற்றுவித்து, டாக்டர்களை கிராமங்களில் இருக்கும்படி செய்ய வேண்டும். எடுத்தவுடனேயே அரசு நேரடியான நடவடிக்கைகளை மேற்கொள்கிற போது, அவர்கள் உடனடியாக தங்கள் அமைப்பின் மூலம் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். உடனே பத்திரிகைகளெல்லாம் ஏதோ அரசுதான் தப்புச் செய்து விட்டதுபோல் எழுதுகின்றன. இது போன்ற அசம்பாவிதங்களெல்லாம் நடக்காமலேயே ஒரு மனமாற்றம் ஏற்படுவதற்காகத்தான் அரசு பாடுபட்டுக் கொண்டிருக்கிறது.

கேள்வி: மிகவும் பின்தங்கிய நிலையிலுள்ள உகாண்டாவில் கூட மருத்துவத் துறைக்கு எட்டு சதவீதம் நிதி ஒதுக்கப்படுகிறது. ஆனால் இங்கோ மூன்று சதவீதம் தான் ஒதுக்கப்படுகிறது என்பதால் அது நிர்வாகச் செலவுக்கே சரியாகி விடுகிறது என்று டாக்டர் ராமமூர்த்தி தமது அறிக்கையில் கூறியிருக்கிறாரே?

பொன்முடி: எல்லாத் துறைகளுக்கும் இருக்கிற நிதிப் பிரச்னை இதற்கும் இருக்கிறது என்பது உண்மைதான். அதனால் அத்யாவசியப் பணிகள் ஏதும் பாதிக்கப்படவில்லை. புதிய கட்டடங்களுக்கு நிதி ஒதுக்கீடு செய்து கொண்டிருப்பதோடு, ஓர்




ஆரம்பசுகாதார நிலையத்தில் மருந்துகள் வாங்குவதற்காக ஆண்டொன்றுக்கு ஐயாயிரம் ரூபாய்தான் என்றிருந்த நிலை மாறி, இப்போது பன்னிரண்டாயிரம் ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது. அதோடு, முன்பு இடைத்தரகர்கள் மூலம் மருந்துகளை வாங்கிய நிலையை மாற்றி, அரசே நேரடியாக உற்பத்தியாளர்களிடம் வாங்குகிற நிலையைக் கொண்டு வந்து, 'கமிஷன்' முறையை ஒழித்திருக்கிறோம். இதில் சிறிது தாமதமானது உண்மை. ஆனால் இப்போது எங்கும் மருந்துகள் பற்றாக்குறை என்பது நிச்சயமாகக் கிடையாது.

கேள்வி: சாதாரணமாக, பெரிய மருத்துவக் கருவிகளை வெளி நாடுகளிலிருந்து தருவிக்கும் போது, அவற்றை வைப்பதற்கான இடவசதி, மற்ற வசதிகள் போன்றவற்றைப் பற்றிய பிரக்ஞையே இல்லாமல் வாங்குவதால் அவை இங்கே வந்தும் பயன்படாமல் போகின்றன. அதோடு, அரசுத் துறைக்கே உள்ள சிவப்பு நாடா முறையும் சேர்ந்து கொள்வதால் இன்றைக்கு நவீனமாக இருக்கும் கருவியை நாம் ஒரு வழியாகக் கோப்பு வேலைகளையெல்லாம் முடித்து வாங்குவதற்குள், பழைய கருவியாகி விடுகிறது என்றும் டாக்டர் ராம மூர்த்தி தமது அறிக்கையில் சுட்டிக் காட்டியுள்ளாரே?

பொன்முடி: முன்பு மதுரை மருத்துவமனையில் ஒரு கருவி அப்படி வந்து பார்சல் பிரிக்கப்படாமலேயே இருந்தது உண்மைதான். ஆனால் நாங்கள் பொறுப்பேற்ற பிறகு அப்படியில்லை. எல்லாவற்றையும் கவனமாகத் திட்டமிட்டே செய்கிறோம். ஆனால், ஒரு கருவியை வெளி நாட்டிலிருந்து தருவிக்கும் போது, தனியார் துறை மாதிரி அரசுத்துறையில் விரைவாகத் தருவிக்க முடியாது. சிறிது காலம் பிடிக்கத்தான் செய்யும். அரசுத்துறையில் அப்படி இருப்பதுதான் நல்லதும் கூட.

கேள்வி: சாதாரணமாக தமது கிளினிக்குக்கு வரும் ஒரு நோயாளியை, அடுத்த நாள் தாம் வேலை பார்க்கும் அரசு மருத்துவமனைக்கு வரச் சொல்லி, அவரை அங்கேயே அட்மிட் செய்து வைத்தியம் பார்த்துப் பணத்தை மாத்திரம் வாங்கிக் கொள்ளும் சில டாக்டர்களும் இருக்கிறார்களே?

பொன்முடி: ஆமாம். இதை டாக்டர்களிடமே பேசியிருக்கிறேன். இதைத் தடுப்பதற்கு என்ன வழி என்று அவர்களிடமே கேட்டிருக்கிறேன்.

கேள்வி: சாதாரணமாக இ.எஸ்.ஐ. மருத்துவமனைகளில் கவனிப்பு போதாது; காசில்லாமல் எதுவுமே நடப்பதில்லை.....

பொன்முடி: கே. கே. நகரிலுள்ள இ.எஸ்.ஐ. மிக நன்றாக இயங்குகிறது. எல்லா வசதிகளும் இருக்கின்றன.

கேள்வி: இருக்கிற வசதிகள் நோயாளிகளுக்குக் கிடைக்க வேண்டுமானால் லஞ்சம் தர வேண்டியிருக்கிறது என்பது தான் பிரச்னையே....

பொன்முடி: நான் போகும் ஒவ்வொரு மருத்துவமனையிலிருக்கும் நோயாளிகளிடமும் கேட்கிறேன். இதுபோல் யாரும் குற்றம் சுமத்துவதில்லையே!

கேள்வி: அப்படிச் சொன்னால், அங்கிருப்பவர்கள், 'ஓஹோ... அமைச்சரிடமே புகார் சொல்லுகிற அளவுக்கு வந்துவிட்டாயா?' என்று நீங்கள் வந்தபிறகு அந் நோயாளிகளை மிரட்டுவார்களே என்கிற பயம்தான்!

பொன்முடி: நான் நோயாளிகளைத் தனிமையில் சந்தித்தும் கேட்டிருக்கிறேன். அவர்கள் சொல்வதே இல்லை. அப்படியே யாராவது பொதுப்படையாகக் குற்றம் சாட்டினாலும் எழுதித்தர மறுக்கிறார்கள். இந்த நிலையில் நான் எதன் அடிப்படையில் நடவடிக்கை எடுக்க முடியும்? பொது மக்கள்

தைரியமாக ஒத்துழைக்க முன்வர வேண்டும். அப்போதுதான் ஒரு நல்ல தீர்வு காண முடியும்.

கேள்வி: மகப்பேறு மருத்துவமனைகளில் கூட அப்படித்தான். லஞ்சம் மாத்திரமல்ல; அங்கு போய்ச் சேரும் பெண்களை ரொம்பவும் கொச்சையாகக் கூடத் திட்டுகிறார்களாம்! சென்று வந்த பெண்களே சொல்லியிருக்கிறார்கள்....

பொன்முடி: நர்ஸ்களோ, டாக்டர்களோ அப்படிச் செய்வார்கள் என்று நான் நினைக்கவில்லை. நர்ஸ்களின் கோரிக்கையான மூன்று ஷிப்ட் முறையை அரசு ஒப்புக் கொண்டிருக்கிறது. மற்றவர்கள்தான் அப்படி பேசக்கூடும். அவர்களையும் நான் அழைத்துப் பேசியிருக்கிறேன். இது போன்ற விஷயங்களைக் கவனித்து ஆவன செய்வதற்கு வசதியாக, ஒவ்வொரு மருத்துவமனையிலும் பல துறைகளிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரைக் கொண்ட ஒரு குழுவை அமைக்க உத்தேசித்திருக்கிறோம். முதல் கட்டமாக ராயப்பேட்டை மருத்துவ மனையில் எட்டுப் பேர் கொண்ட குழுவை நியமித்திருக்கிறோம். டாக்டர் ராமமூர்த்தி தமது அறிக்கையில் சுட்டிக் காட்டியிருப்பதுபோல் மாவட்ட அளவிலான அதிகாரப் பங்கீட்டு முறையை முழுமையாகச் செயல் படச் செய்வதும் இது போன்ற குற்றச் சாட்டுக்களைக் குறைக்க வழி செய்யுமென்று நம்புகிறேன்.

கேள்வி: இப்போது எங்கு பார்த்தாலும் 24 மணிநேர கிளினிக்குகள் வந்து விட்டன. இவற்றில் பெரும்பாலானவற்றில் இறுதியாண்டு படிக்கும் மருத்துவக் கல்லூரி மாணவர்கள்தான் நோயாளிகளைக் கவனிக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. இது ஆபத்தானதில்லையா?

பொன்முடி: டாக்டர் ராமமூர்த்தி அறிக்கையில் இவை பற்றியும் இருக்கிறது. தனியார் மருத்துவ மனைகளை எப்படியெல்லாம் முறைப்படுத்தலாம் என்பது பற்றி அரசும் யோசித்து வருகிறது. அதே போல் உலக வங்கி கொடுத்துள்ள ஐந்து கோடி ரூபாய்க் கடனுதவியால், விபத்துகளில் சிக்கியவர்களை உடனடியாகக் கொண்டு வந்து சிகிச்சையளிப்பதற்காக 'ஆக்ஸிடண்ட் வார்டு' என்று ஒரு தனிப் பிரிவையும் சென்னையில் ஏற்படுத்த உள்ளோம். அதன் செயல்பாட்டைக் கண்டறிந்த பிறகு, மற்ற நகரங்களிலும் அதை விரிவுபடுத்த எண்ணியுள்ளோம்.

பேட்டி: **பிரின்ஸ்**
படம்: **யோகா**




# தங்கநகை அணிந்தால் 'பொன்னுக்கு வீங்கி' குணமாகுமா?

## டாக்டர் பதில்கள்:

0 சி. சந்திரசேகரன், வேலூர் — 1.

● **புட்டாளம்மை (பொன்னுக்கு வீங்கி) என்பது என்ன? அது வந்தால், தங்கத்தால் ஆன ஆபரணங்களைப் போடுவதற்கு என்ன காரணம்? அப்படிப் போட்டால் குணமாகிவிடுமா, அல்லது மருந்துதான் சாப்பிட வேண்டுமா?**

00 டாக்டர் சந்திரசேகர சாண்டில்யா, சென்னை — 28:

புட்டாளம்மை என்பது அம்மை போன்று ஒருவித நுண்கிருமிகளால் உண்டாவது. இது தொத்து வியாதி. எச்சிலை உற்பத்தி செய்யும் சுரப்பிகளில் வீக்கம் ஏற்படுவதால், தாடை வீங்கிக் காட்சியளிக்கிறது. இதற்குத் தங்கத்தைப் போடுவது என்பது ஒரு பழங்காலத்து மூடநம்பிக்கை. நுண்கிருமிகளைக் கொல்ல, குறிப்பான மருந்துகள் இல்லாத போதிலும், இதன் காரணமாக வரும் வீக்கம், வலி, ஜுரம் ஆகியவற்றிற்கு மருந்துகள் இருக்கின்றன. டாக்டர் தரும் மருந்துகளைத் தவிர்ப்பது நல்லதல்ல. தங்க நகை போட்டாலும், போடா விட்டாலும், இந்தப் 'பொன்னுக்கு வீங்கி' ஏழு நாட்களில் மறைந்து விடும்!

0 ஜி. சங்கரபாண்டியன், ஆர். ஆர். நகர்:

● **முப்பத்தொன்பது வயதான நான், தூசி, குளிர்ச்சியான பொருள்களால் அலர்ஜியாகி, தும்மல், மூக்கு ஒழுகுதல், சளி கட்டுதல், போன்ற பிரச்னைகளால் கடந்த பதினைந்து ஆண்டுகளாக அவதிப்படுகிறேன். எந்த மருந்து சாப்பிட்டாலும் தாற்காலிக குணம்தான் கிடைக்கிறது. நிரந்தரமாகக் குணம் கிடைக்க வழியே இல்லையா?**

அலர்ஜி என்பது நமது உடலுக்கு ஒத்து வாராத சில பொருட்களால் உண்டாவது. இவை உடலில் புகுந்த மாத்திரத்தில், ஹிஸ்டமின் என்னும் பொருள் ரத்தத்திலுள்ள வெள்ளை அணுக்களிலிருந்து தயாராகிறது. இவைகளினால்தான் மூக்கடைப்பு, தும்மல், மூக்கு ஒழுகுதல், சளி கட்டுதல், தோலில் ஏற்படும் அர்டிகேரியா எனும் அரிப்பு, மூச்சுக்குழாய் தாற்காலிகமாகக் குறுகிப் போவதால் பிராங்கைடிஸ்; கண்கள் சிவந்து அலர்ஜிக் கஞ்ச்டிவைடிஸ் போன்ற உபாதைகள் வந்து அவதிப்படுகிறீர்கள். தாற்காலிக நிவாரணமாக ஹிஸ்டமினை முறியடிக்கும் மருந்துகள் சாப்பிடலாம். மியூகஸ் மெம்பரேன் வீக்கத்தைத் தடுக்கவும், சைனஸ் துவாரங்களிலும், மூச்சுக் குழாய்களிலும் இறுகிப் போயிருக்கும் சளியைக் கரைக்கவும் மருந்துகள் உட்கொள்ளலாம். மேலும் நிரந்தர நிவாரணம் பெற இயோஸினோபில் எனப்படும் வெள்ளை அணுக்களைக் குறைக்கவும் மருந்து சாப்பிடலாம். உடம்பின் தடுப்புச் சக்தியான ஆன்ட்டிபாடீஸ்களை அதிகப்படுத்த, இம்யுனோகுளோபின் ஊசிகள் போட்டுக் கொள்ளலாம். எந்தெந்தப் பொருட்கள் நமக்கு ஒத்து வரவில்லை என்று என்டோடெர்மல் ஊசிகள் மூலம் கண்டறிந்து, அவற்றைச் சேர்த்துக் கொள்ளாமலோ, தாக வெளிவரும் சூழ்நிலைகளைத் தவிர்ப்பதன் மூலமோ, அலர்ஜி வராமல் தப்பிக்கலாம்.

தொகுப்பு: எஸ். வி. என்.

14

# சிகரங்களை நோக்கி...

அது இலையுதிர் காலம்.

இலையுதிர் காலம் வந்தால் திருஞானம் அழுது விடுவான்.

அவனுக்கு விஞ்ஞானம் தெரியும்.

இந்தத் தாவர நிர்வாணம் புத்தாடை புனைவதற்கான களைவுதான் என்பதையும் அவன் கவிதை அறியும்.

ஆனாலும், வறுமையுற்ற குசேல மரங்கள் வானத்தை யாசிக்கும் போதெல்லாம் அவன் வாடிவிடுவான்.

இன்னும் குறிப்பாய் — இந்த வருடத்து இலையுதிர் காலம் அவனது வறுமையின் வரைபடம் என்றே விளங்கி வைத்திருக்கிறான்.

இலையுதிர் காலக் கிளைகளுக்குள்ளே தளிர்கள் தூங்கிக் கொண்டிருக்கின்றன.

ஆனால், எனக்குள் சருகுகள்... வெறும் சருகுகள்.

o

''என்ன, திருஞானம்! பனிக்காலத் தாமரையாய் உங்கள் கவிதைமுகம் ஏன் கருகியிருக்கிறது?

உங்கள் கண்களில் பார்வை இறந்து கிடப்பது ஏன்?

இப்போதெல்லாம் சிரிப்பதை நிறுத்தி விட்டீர்கள்.

எப்போதாவது சிரித்தாலும் தண்ணீரில் எண்ணெய் மிதப்பது போல் உதட்டில் அது ஒட்டாமலே இருக்கிறது.

என்ன நேர்ந்தது உங்களுக்கு...?

ஏன் மௌனத்தை மட்டுமே மனப்பாடம் செய்து கொண்டிருக்கிறீர்கள்?''

அவன் பேசவில்லை.

ஒரே ஒரு புன்னகை மட்டும் அவன் உதட்டின் ஒரு கோடியில் பிறந்து



மறுகோடியில் இறந்தது.

ஒலியாவின் கடல்போன்ற கண்களில்
விழுந்து கொஞ்ச நேரம் நீச்சல் தெரியாமல்
தத்தளித்தான்.

மேலதிகாரியின் குற்றத்தைச் சுட்டிக் காட்டத்
தயங்கும் பணியாளன் போலப்
பரிதவித்தான்.



"உனக்கென்ன!

எரிமலையின் திரிகளில் தீ வைத்துவிட்டு,
பொழுது போக வேண்டுமென்று
பூப்பறித்துக் கொண்டிருக்கிறாய்.
எனக்குத்தானே தெரியும் இதயம் வெடித்து
எங்கெங்கே சிதறுகிறதென்று!

ஒரு போராட்டத்திற்குப் பிறகு உன்
தோட்டம் வந்து உன்னிடம் பூக்களை
யாசித்தேன்.

நீயோ —

என் எடைக்கு எடை விறகு கொடுக்கிறாய்.

இந்தப் பாலைவனத்திற்கு மேலே ஒரு மேகம்
மையமிட்டது. அது மழை விழுதுகளை
இறக்கும் என்று பார்த்தால் இடியை
அல்லவா இறக்கிவிட்டது!

காதலைக் கூட பெளதிகமாய்
இரசாயனமாய்ப் பார்க்கக் கூடாது
பெண்ணே!

கண்ணீர் எங்கிருந்து வருகிறது என்கிறேன்
நான்;
கண்ணீரில் உப்பு எங்கிருந்து
வருகிறது என்கிறாய் நீ.

என்னைப் புரியவில்லையா? அல்லது,
உனக்குப் புரிந்து விட்டது என்பது
எனக்குப் புரியவில்லையா?

என் தாகத்திற்கு ஒரு குவளை நீர் கேட்டேன்.
நீயோ இந்து மகா சமுத்திரத்தின்
நீள அகலம் பேசுகிறாய்.

உன் முன்னால் என் மனசை இப்படி
யெல்லாம் அவிழ்த்துவிட வேண்டுமென்று
தான் ஆசைப்படுகிறேன்.

ஆனால் உன்னைக் கண்டதும் தொட்டாற்
சிணுங்கி இலைகள் ஒன்றோடொன்று
ஒட்டிக் கொள்வது மாதிரி உன்நாக்கில்
வார்த்தைகள் ஒட்டிக் கொள்கின்றன."

அவன் மீண்டும் புன்னகைத்தான்.
அது இறந்த குழந்தையை யாரோ
தொட்டிலாட்டுவது போலிருந்தது.

அவன் உள்ளத்தில் ஓடுவதை அவனால்
ஊகிக்க முடியவில்லை.

அவன் கண்கள் பொங்குவதை அவள்
கவனித்தாள்.

"கண்கள் இதயத்தின் ஜன்னல்களாம்.

அந்த ஜன்னல்களுக்கும் நீர்த்திரை போட்டு
இப்படி மறைத்தால் எப்படி?"

"உண்மை சொல் ஒலியா!
உனக்குக் காதலைப் பிடிக்கவில்லையா?
அல்லது என்னைப் பிடிக்கவில்லையா?"

தண்ணீரிலிருந்து தவளை தரைக்குத்
தாவுவது மாதிரி அவன் கண்ணீரிலிருந்து
வார்த்தைக்குத் தாவினான்.

அவள், முகத்திலிருந்த உணர்ச்சிகளை
மொத்தமாய்த் துடைத்துவிட்டு ஞானப்
பெண்ணாகினாள்.

"காதல் பிடிக்காதா...? எனக்கா?

காதல் பிடிக்கவில்லை என்றால் வாழப்

**வைரமுத்து**

## அடுத்த இதழில்...



●● ''கட்சிக்காரர்கள் தவறு செய்தாலும் விட்டுவிடுவதில்லை!''
— திருநாவலூர்த் தொகுதி எம். எல். ஏ. கூறுகிறார்...

●● ஃபேஷன் —
ஆண்களுக்கும் ஆசைதான்!
— சிறப்புக் கட்டுரை

●● ஐ. ஏ. எஸ். தேர்வுகளில் தமிழக மாணவர்கள் பின்தங்குவதேன்?

பிடிக்கவில்லை என்று அர்த்தம் திருஞானம்.

இந்தப் பூமியே உழைப்பால்தான் நிறம் பெறுகிறது; காதலால்தான் நிறைவு பெறுகிறது.

காதலிக்காதவர்களின் கல்லறை மீது 'இந்த பூமியை ஒரு கண்ணால் மட்டுமே பார்த்தவர்கள் இங்கே உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்' என்று பொறித்து வைக்க வேண்டும் என்று குறித்து வைத்திருக்கிறவன் நான்.

வாழ்க்கை என்ற உயிர்ச் சங்கிலி அறுந்துவிடாமல் காலங்காலமாகக் காத்து வருவது காதல்.

ஒரு ஜீவனுக்கு இன்னொரு ஜீவனால் கொடுக்க முடிந்த கதகதப்பான உத்தரவாதம் காதல்.

கொடுப்பவர்கள் மட்டுமே அதிகம் பெறுகிற ஒரே ஓர் அதிசயம் காதல்.

கண்ணீரில் வாழ்க்கை செலவழிக்கப் படுகிறது; காதலில்தான் சம்பாதிக்கப் படுகிறது.

காதல் என்பது அமுதவிஷம்.
புரிந்தோர்க்கு அது அமுதம்;
புரியாதோர்க்கு அது விஷம்.

காதல் என்பது புரிதல்.

காதல் என்பது கனபரிமாணமல்ல;
மனபரிமாணம்.

''எனக்கும் காதல் வேண்டும்!
நானும் காத்திருக்கிறேன்!
என் மார்பைவிட உயரமான ஒரு வாலிபனுக்கல்ல; என் மனசைவிட உயரமான ஒரு மனிதனுக்கு.''

காசை எறிந்துவிட்டுப் பிச்சைக்காரனின் புன்னகைக்காகக் காத்திராத யாத்ரீகன் மாதிரி அவன் போய் விட்டான்.

விளக்கணைந்தால் மட்டும்தான் இருள் வருமா? அவன் விலகிச் சென்றாலும் வருகிறதே!

○

மீண்டும் மௌனம் அங்கே இரைச்சலிட்டது.

நான் தனிமையின் கர்ப்பத்தில் பிறந்தவனா?

நான் கேட்ட தாலாட்டெல்லாம் மௌனம் தானா?

எந்தச் சுவரில் எறிந்தாலும் திரும்பி வருகின்றனவே என் ஆசைகள் எல்லாம் பந்துகளா?

என் மனசை எழுத்துக் கூட்டிப் படிக்க முடியாத நீ இரவுப் பள்ளியில் என்ன பாடம் கற்பிக்கப் போகிறாய் ஒவியா?

மின்சாரம் வேறு அறுந்து விட்டது.

இதோ!
என்னோடு அழுவதற்கு ஒரு மெழுகுவர்த்திதான் இருக்கிறது.

இந்த வீட்டுக்குள் வந்ததும் ஒரு கூட்டுக்குள் வந்ததாய்க் குதூகலித்தேன்.

இல்லை! நீ மறுதலித்து விட்டாய்.
இது கூடல்ல; கூண்டு.

○

''யாரப்பா நீ? என் வீட்டுக்குள் ஓர் அந்நியன்...?''

குரலா...? இந்த வீட்டுக்குள் இன்னொரு குரலா? இருள் பேசுமா?

கனவில் கிடந்தவன் கண் விழித்தான்.

நிலவறை திறந்திருந்தது.

ஓ! வெளிச்சத்திற்கு வெளியே நிற்கும் அந்த விசுவரூபம்தான் விஞ்ஞானியா?

பூமி பிளந்து விதைதான் வெளிவரும்; விருட்சமுமா வெளிவரும்?

உலகப் போரில் நிலைகுலைந்த ஐரோப்பாவாய் ஆடைகள். தாடிக்குள் மூடிப் போன முகம். ஊசியிலைக் காடுகளில் தீப்பந்தங்களாய் இரண்டு கண்கள்.

திகைத்துப் போன திருஞானம் அனிச்சைச் செயலாய் எழுந்தான்.

''நீங்கள்... நீங்கள்தானே ஒவியாவின் தந்தை?''

''ஓவியாவைத் தெரியுமா உனக்கு?''

''ஓவியாவை மட்டுமல்ல; உங்களையும் தெரியும். நுண்ணுயிர் ஆராய்ச்சியில் நீங்கள் மண்ணுயிர்களையே மறந்தது தெரியும்.

சீதை சிறையெடுக்கப்பட்டது போல் உங்கள் சிந்தனையும் சிறையெடுக்கப்பட்டது தெரியும்.

மனிதரோடு முரண்பட்டு நீங்கள் மண்புழு வாழ்க்கை வாழ்வதும் தெரியும்.''

''இத்தனை சொல்கிறாயே! ஒருவேளை நீ ஓவியாவின் கணவனா?''

திருஞானம் வறட்சியாய்ச் சிரித்தான்.

''மகளுக்கே அந்நியனாய் இருக்கும் நீங்கள் என்னை அந்நியன் என்று அழைத்ததில் ஆச்சரியமில்லைதான்.

வெளிச்சத்தை வெளியேற்றிவிட்டு என்ன வாழ்க்கை வாழ்கிறீர்கள் இருட்டோடு?

சொல்லுங்கள்! உண்மை சொல்லுங்கள்! நான் ஓவியாவின் நண்பன்; உங்களில் ஒருவன்.''

மெழுகுவர்த்தியின் கிரணங்கள் மிதந்து கொண்டிருந்த அவர் கண்கள் திடீரென்று சூரியத் துண்டுகளாய் ஜொலித்தன.

ஆவேசத்தில் உடம்பு ஆடியது.

''தம்பி! என் லட்சியம் இப்போது தொட்டு விடும் தூரத்தில்.

எந்த மனிதர்கள் என் மீது எச்சில் துப்பினார்களோ அவர்கள் முகத்தில் திராவகம் துப்பப் போகிறேன்.

என்னைச் சிலுவை சுமக்க வைத்தவர்களே என்னைப் பல்லக்கில் தூக்க வருவார்கள். என் ஆராய்ச்சியில் இந்தப் பூமி உருண்டை புரளப் போகிறது.

களவாடப்பட்ட என் கிரீடத்தை என் காலடியில் வைக்காமல் விடமாட்டேன்.''

''இது விஞ்ஞானியின் குரலில்லை; விரக்தியின் குரல்.''

''இல்லை! விரக்தியின் குரலில்லை; அவமானத்தின் குரல்.

ஒரு சமுத்திரத்தில் மூழ்கி நான் முத்துக்களோடு வந்தேன். முத்துக்கள் திருடப்பட்டு முகத்தில் உமிழப்பட்டேன்.

இப்போது'என் இரண்டு கைகளிலும் முத்துக்களில்லை; முட்கள்.

இந்த முட்களைத் திருட யார் முன் வருவார் பார்க்கிறேன்.''

அவர் கண்களில் சிவப்பு மின்னல்கள் தெறித்துவிழக் கண்டான், திருஞானம்.

''ஓர் ஏமாற்றத்தில் உங்கள் இதயத்தின் மனிதப் பகுதி இடிந்துவிட்டது.

ஒரு முறை தண்ணீரில் மூழ்கித் தத்தளித்ததற்காய்ச் சமுத்திரத்தை நாடு கடத்த முடியுமா?

ஒரு விஞ்ஞானி இந்தச் சமூகத்தைமூளையால் பார்க்கிறான்; ஒரு கலைஞன் இந்தச் சமூகத்தை இதயத்தால் பார்க்கிறான்.

மூளையால் பார்ப்பவன் இதயத்தை இறக்கி வைத்துவிடக் கூடாது; இதயத்தால் பார்ப்பவன் மூளையை மூலையில் வைத்து விடக் கூடாது.

இதயத்தால் குழைத்து மூளையால் கட்டப்படுகிற பாலம்தான் சமூகம்.

உங்களுக்கு நேர்ந்த காயத்திற்காய் பூமியின் இடுப்பில் வடுப்பட வைப்பேன் என்பது என்ன நியாயம்?''

''எது நியாயம்?

நிமிடத்திற்கு நிமிடம் மாறுபடுவதே நியாயம்; இடத்திற்கு இடம் வேறுபடுவதே நியாயம்.

ஒருத்திக்கு ஐவர் என்பது ஓர் இதிகாசத்தின் நியாயம்; ஒருவனுக்கு ஒருத்தி என்பது இன்னோர் இதிகாசத்தின் நியாயம்.

நியாயங்களின் மீது நான் நம்பிக்கை இழந்துவிட்டேன்.
இந்த பூமி சுற்றுமா சுற்றாதா என்பதை இனி என் சோதனைச் சாலைதான் தீர்மானிக்க வேண்டும்.''

விஞ்ஞானியின் கண்கள் விஷம் கக்கின.

— இன்னும் செல்வேன்

---

''அவர் யாரு? என்ன கொடுக்கிறார்? காலண்டரா?''

''ஊஹூம்; காண்ட்ராக்டர்; லஞ்சம் கொடுக்கிறார்!''





''எனக்கு லெட்டர் இருக்கா?''

''ஏதாவது ஒரு 'ஸார்ட்டிங் ஆபீஸ்'லே கோணிப் பையிலே பத்திரமா இருக்கும், கவலைப்படாதீங்க!''







* நெடுநாள் ஆசை!

# தமிழகத்தில் உல்ஃபா தீவிரவாதிகளின் முகாம் உள்ளதாமே?

● ஆர். ஜெஸ்மின் ரமேஷ், கம்பம்.

? புலிகளின் கால வரையற்ற சண்டை நிறுத்தம் எதைக் காட்டுகிறது?

! ரொம்பவும் நஷ்டமடைந்திருக்கிறார்கள் என்பதையும், தங்களைச் சுதாரித்துக் கொண்டு பலத்தைத் திரும்பத் திரட்டிக் கொள்ள அவர்களுக்கு அவகாசம் தேவைப் படுகிறது என்பதையும்தான்.

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

? வாசகர் யோசனைப்படி கட்டுரை வெளியிடுவதற்கும் குமுதம் தனியாக ஒருவரை இதழ் தயாரிக்கச் சொல்வதற்கும் என்ன வேறுபாடு?

! மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு. பின்னதில் ஒரு தனி நபரின் விருப்பு வெறுப்புக்கள் மட்டுமே பிரதிபலிக்கப்படுகிறது. முன்னதில் பல்லாயிரக்கணக்கானவர்களின் பொதுப்படையான யோசனைகள் அலசப்பட்டு ஒரு சில மட்டும் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. பின்னது சுயவிளம்பரத்துக்கும் உதவுகிறது. முன்னதில் சமுதாய நோக்கு மட்டுமே நிற்கிறது.

● இ. எஸ். லலிதா, குடியாத்தம்.

? டீ. வி. யில் 'காலத்தை வென்றவர்கள்' தொடர் எப்படி?

! யோசனை அருமையானதுதான். ஆனால் சரியானபடி திட்டமிடப்பட்டு அமுல் படுத்தப்பட்டதாகத் தோன்றவில்லை. ஓவியர் மணியம், அமரர் கல்கி ஆகிய இருவரைப் பற்றிய நிகழ்ச்சிகளையும் பார்த்தவர்களுக்கு, ''நன்றாய்த்தான் இருந்தது; ஆனால் நிறைவாக இல்லையே'' என்ற எண்ணம் ஏற்பட்டது. தவிர, பேச்சைக் குறைத்து விஷுவலை அதிகரிக்க முயற்சி செய்திருக்கலாம்.

● ஆ. ரா. உமாசங்கர், சென்னை — 18.

? புத்தாண்டு தினத்தில், 'இனிமேல் தன்னலத்தை விட்டு மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபட வேண்டும்' என்று எல்லா அரசியல்வாதிகளும் உறுதிமொழி எடுத்துக் கொண்டிருந்தால்...?

! அன்று பூ வியாபாரம் ஓகோ என்று இருந்திருக்கும். எண்பது கோடி மக்கள் காதில் பூ சுற்றுவதென்றால் சும்மாவா!

● ஜி. ஷோபா, ஹெரசூர்.

? அயோத்தி ராமர் கோயிலை அரசாங்கமே கட்டுமாமே?

! அட ராமா! இது என்ன புதுக் குழப்பம்!

● எல். மாறன், மேல்பட்டி.

? தி. மு. க. ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டே ஆக வேண்டும் என்று நினைப்பவரிடத்தில் நாம் என்ன கருத்துச் சொன்னாலும் எடுபடாமல் போய் விடுகிறதே, என்ன செய்ய?

! இதைப் புரிந்து கொண்டுதான் முதல்வரும்,

'கலைத்தால் மீண்டும்
கருவாவோம்
உருவாவோம்
மீண்டும்
திருவாவோம்'

என்று புதுக்கவிதை இயற்றத் தொடங்கி விட்டார் போலும்!

● டி. சீனிவாசன், சென்னை.

? சந்திரசேகரது ஆட்சி இந்திய மக்களின்

நெடுநாளையத் தேவைகளைப் பூர்த்தி செய்யுமா?

! இப்போதைக்குச் சந்திரசேகரின் நெடுநாளைய ஆசை பூர்த்தியாகியிருக்கிறது.

வி. அருண், ஈரமங்கலம்.

? **'கலைவாணர் என். எஸ். கே. போலவே, நகைச்சுவையோடு நல்ல கருத்துக்களை எஸ். எஸ். சந்திரனும் சொல்கிறார்' என்று விருது வழங்கும் விழாவில் முதல்வர் பேசியிருப்பது பற்றி...?**

! நல்ல நகைச்சுவை!

● கே. ஆர். விஜயா, கோவை.

? **தம்மைச் சந்தித்து ஆசி பெற வரும் அரசியல்வாதிகளைப் பற்றிக் காஞ்சிப் பெரியவர் என்ன நினைப்பார்?**

! ஆசி பெறத்தான் வருகிறார்கள்; ஆலோசனை பெற அல்ல என்பதை மறக்காமல் ஆசிகளை வழங்கிவிடுவார்.

● பாலகிருஷ்ணன் ஜி, சங்கமங்கலம்.

? **போதைப் பொருள்கள் பயன்படுத்துவோருக்குப் புதுமையான பொன்மொழிகள் கூறுங்கள்?**

! ஜே. கே. சொன்னாலும் கேட்காதீர்கள்; குமுதம் பிரசுரித்தாலும் ஏற்காதீர்கள்!

ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

? **'தமிழகத்தில் ஆறு இடங்களில் உல்ஃபா தீவிரவாதிகளின் முகாம் உள்ளது' என்று வாழப்பாடி கூறியிருப்பது பற்றி?**

! தி. மு. க. ஆட்சியை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்று தீர்மானித்த பிறகு, அதற்கு என்னவெல்லாம் குற்றச்சாட்டுக்களைக் கற்பனை செய்ய முடியுமோ, அத்தனையையும் அடுக்க வேண்டியதுதானே! அதனால்தான் ஜெ கட்சியும், காங்கிரஸூம் கற்பனைக் குதிரையைத் தட்டிவிட்டுக் கலைஞரை ஊழலின் அவதாரம் எனவும் வன்முறையின் மொத்த உருவமாகவும் சித்திரிக்கின்றன. விடுதலைப் புலிகளுக்கும், உல்ஃபாவுக்கும் தொடர்பு; தேசிய முன்னணியில் மஹாந்தாவின் கட்சிக்கும் கலைஞரின் தி. மு. க. வுக்கும் தொடர்பு; அதனால் கலைஞருக்கும் உல்ஃபாவுக்கும் தொடர்பு! ஆந்திராவில் நக்ஸலைட்டுகள் பலம் பெறவும், பஞ்சாபிலும், காஷ்மீரிலும் பயங்கரவாதிகள் வலிமை பெறவும் கலைஞரே காரணம்...! 102 பக்கக் குற்றச்சாட்டுக்களைத் தயாரிப்பதென்றால் இலேசான காரியமா? ஏதோ, ஈராக்கின் சத்தாம் ஹுசேன் காட்டும் பிடிவாதத்துக்கும் கலைஞர்தான் காரணம் என்று கூறாமல் விட்டார்களே, அந்த மட்டில் கலைஞர் நன்றி தெரிவிக்க வேண்டியதுதான்!

● எஸ். யோகலிங்கம், சென்னை — 82.

? **இந்தியக் கிரிக்கெட் அணியின் சத்தத்தையே காணோமே?**

! என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள், ஆசியா கோப்பையை வென்றிருப்பவர்களைப் பற்றி! கபிலின் ஹாட்ரிக்கையா, அஷாரின் ஆட்டத்தையா எதைப் பாராட்டுவது என்று புரியாமல் தவிப்பு; ஸ்ரீலங்கா அணியின் காப்டனுடைய நடுவர் பற்றிய முணுமுணுப்பு சுசப்பு.

● எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

? **ஜனநாயகம் எப்படி இருக்க வேண்டும்?**

! நேர்மை, நல்மரபுகளுடன் புத்திசாலித்தனமும் வேண்டும். (உம்) சு. சுவாமி சபாநாயகரை மிரட்டியது தப்புத்தான். அதற்குத்தான் பிரதமரே மன்னிப்புக் கேட்டு விட்டாரே. அத்துடன் விட வேண்டியதுதானே! 'சு. சுவாமி மீது கண்டனத் தீர்மானம் கொண்டு வரவேண்டும்' என்றன எதிர்க்கட்சிகள், அசட்டுத்தனமாக. தீர்மானம் வோட்டுக்கு விடப்பட்டுத் தோற்றால் அது சபாநாயகருக்கு இழிவு என்பதை யோசிக்கவில்லை. நல்லவேளை தக்க சமயத்தில் விழித்துக் கொண்டதில் ரபி ரேயின் மானம் பிழைத்தது!

● கே. செல்வராஜ், பனங்காடு. *

? **பதவி நீக்கம் செய்யப்பட்ட இரு எம். எல். ஏக்களை மீண்டும் சேர்த்துக் கொண்ட போது 'அவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள்' என்று சபாநாயகர் காரணம் கூறியது, இனி முன்னுதாரணமாகக் (மரபு) கொள்ளப்படுமா?**

! மோசமான முன்னுதாரணங்களைப் பின்பற்றுவதென்றால் செய்யலாம்!

* புதுக் கவிதை!



* காலத்தை வென்றவர்!



* மிரட்டியது தப்பு!



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

**கே. செல்வராஜ், பனங்காடு,**
**கட்டனாச்சம்பட்டி அஞ்சல்,**
**இராசிபுரம் வட்டம் — 636 301.**



# சிகரம்

முழுக்க முழுக்க சினிமாத்தனம் என்றோ, அல்லது அப்பட்டமான யதார்த்தம் என்றோ பட்டியலிட்டு விட இயலாத வகையில் இரண்டுமே ஒரு அளவான கலவையில் பின்னிப் பிணைந்து விளங்குவதற்குப் பொறுப்பானவர் கதை — வசனம் எழுதி இயக்கியுள்ள அனந்து.

முன் பாதியில் ரேகா. பின் பாதியில் ராதா.

இருவருமே அந்த இசையமைப்பாளரின் (எஸ். பி. பாலசுப்பிரமணியம் — அலட்டல் இல்லாத நடிப்பு) வாழ்க்கையில் சரி சமமாக ஒவ்வொரு வகையில் பங்கேற்றுக் கதையோட்டத்துக்கு விறுவிறு சேர்க்கிறார்கள்.

நடுத்தர வயதைத் தொட்டு விட்டிருக்கும் நாயகன் — நாயகி என்பதால் அவர்களுக்கிடையே காதல் உணர்வுகள் குமிழியிடக் கூடாதா, என்ன? அந்த வயதுக்கே உரிய முதிர்ச்சி உருவாக்கித் தரும் கட்டுப்பாட்டு உணர்வுடன் அவர்களுக்கிடையே நிகழும் அன்புப் பரிமாறல்கள் தனி அழகு.

முழுக்க முழுக்க 'லிபரேட்டட் வுமன்' ஆக விளங்கும் ஒருத்தி எப்படி நடந்து கொள்வாள்? ரம்யா கிருஷ்ணனைப் பார்த்தாலே போதும். மனத்தில் தங்கி விடும் மாறுபட்ட பாத்திரப்படைப்பு.

வழி வழியாக வந்துள்ள கட்டுப்பாடுகளின் தளைகளிலிருந்து இயல்பாகவே விடுபட்டு விட்டிருக்கும் 21—ம் நூற்றாண்டுப் பெண்ணாக அவர் பேசும் (காதலுக்கும் கட்டிலுக்கும் முடிச்சுப் போடுகிற) ஒரு சில வசனங்கள் அதிர்ச்சியேற்படுத்தினாலும், அவற்றைச் சொல்லும் முறையில் அவரிடம் தென்படும் வெகுளித்தனம் அந்தப் பாதிப்பைக் குறைத்து விடுகிறது.

அனந்த் பாபுவுடன் அவர் பாடி ஆடும் காட்சிகள் அது பாலசந்தர் பாசறை என்பதற்குச் சான்றுகள்.

நடப் மாறி இழுத்துச் செல்ல விரும்பும் ஓர் ஆணைப் பளீர் என்று கன்னத்தில் அறைந்து விடும் துணிச்சல் நிறைந்த அவர், உபன்யாசகர் ஒருவரின் கண்ணீர்க் கதையில் கலங்கிப் போய், கண்ணிமைக்கும் நேரத்தில் கட்டுப்பாடிழந்து கற்பு துறக்கிறார் என்பது நம்ப முடியாத பலவீனம்.

சார்லியின் நடிப்பில் சோகம் இழையோடும் நகைச்சுவை பளிச். பின்னணிப் பாடகனாக முன்னேறத் துடிப்பதும், காதலில் ஏமாற்றம் தழுவும் சூழ்நிலையில் தற்கொலைக்கு முயற்சி செய்வதும், அவருடைய அந்த ஒவ்வொரு முயற்சியும் தடைப்பட்டு விரக்தியைத் தூண்டுவதும், உயிர் துறக்க ஒரே வழி தன்னைக் கொலை செய்யப் பணம் கொடுத்து ஆளை ஏற்பாடு செய்வது தான் என்கிற முடிவுக்கு வந்து அதைச் செயல்படுத்தி விடக் கூடிய நிலையில் திடீர் வெற்றி அவரை நாடி விட, கொலையாளியின் பிடியிலிருந்து தப்பியோடித் தன் வாழ்க்கை லட்சியத்தை அடைவதும் அட்டகாசம்.

வீணடிக்கப்பட்டுள்ளவர் — நிழல்கள் ரவி.

இசையமைப்பாளரின் கதை என்பதற்காக, என்னதான் அவை இனிமையாக இருந்தாலும், அத்தனை பாடல்கள் தேவைதானா?

— சி. ஆர். கே.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka




## ஜண்டு பாம்
## ஜலதோஷம், தலைவலி மற்றும்
## நோவுகளை நொடியில் நீக்குகிறது.

படிப்புக்குப் பிறகு விளையாட்டு. இந்த நேரத்தில் சுளுக்குவலி வந்துவிட்டால் பெருந் தொல்லை. எனவேதான் ஜண்டு பாம். சுளுக்கு வலியோடு, ஜலதோஷம், தலைவலி, இடுப்புவலி மற்றும் உடல்வலிகளிலிருந்தும் குணம் அளிக்கிறது.

மற்ற பாம்களோடு ஒப்பிடும்போது ஜண்டு பாம் கூடுதல் வீரியம் கொண்டது. நிறமற்றது. எனவே கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது. அதனால் வீட்டிலோ, வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. கொஞ்சமாக உபயோகித்தாலே போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்திற்கும் இதமானது. ஆகவேதான் தாய்மார்கள் தங்கள் குடும்பத்தினருக்கு ஜண்டு பாமையே தடவ விரும்புகிறார்கள்.

சீசாவின் மேல் இருக்கும் சிகப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.




5, 10 மற்றும் 30 கிராம்களில் கிடைக்கிறது

**ஜண்டு பாம்** வலிகளை நீக்கும் பாம்

ULKA-13033 TAM